சிவமயம்.

# சிறப்புக்கவி.

---

திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனம்

திருப்பூவணூர்வாசம்

ஸ்ரீமத். சுப்பிரமணியத்தம்பிரான்சுவாமிகள்

அருளிச் செய்தது.

உலகனைத்தும் புகழ்தொண்டை மண்டலமா கின்றிசை
வொண்பதியாம் வலிதா யதனி
னுபரியவா ரிடபுரா ணத்தனைப்பாற் கடலினிடை
யூரமுதத் தமிழி லாக்கி
நலங்கொளுநல் லன்பரெல்லாந் தெவிட்டாதிங் கேயுண்ண
நயமொழியி னளித்திட் டானல்
நயவாயி லாநாயனுமரபி லவதரித்த
நற்கீர்த்தி வளாயே ளாளன்
வலமருவு மிலக்கணவி லக்கிய நூல் பலதேர்ந்த
மாணுக்கர் சூழ வாழ்வோன்
வைதீகசைவசித் தாந்தசாத் திரத்துண்மை
யகிழுலகில் வழங்கு சீலன்
நிலவிறையு மகச்சமயந் தாபித்துப் புறச்சமயங்
கள்வாரச் செயுமோர் தீரன்
கவின்பூவை யவதானங் கலியாண சுந்தரநற்
கவிராஜ சிங்க மாதோ !

சிவமயம்.

# சருக்கவட்டவணை.



திருஞான, சம்பந்தமூர்த்திசுவாமிகள் தமது பதனாறாயிரம திருக்கூட்டத்தாருடன் திருவலிதாய
[illegible] தேவாரத்திருப்பதிகம் அரு[illegible]

சிவமயம்.

திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள்

அருளிச்செய்த

# திருவலிதாயதேவாரம்.

பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

பத்தரோடு பலரும் பொலியம் மலரங்கைப் புனறூவி
யொத்தசொல்லி யுலகத்தவர் தாந்தொழு தேத்தவுயர் சென்னி
மத்தம்வைத்த பெருமான் பிரியா துறைகின்ற வலிதாயம்
சித்தம் வைத்த வடியாரவர் மேலடையா மற்றிடர் நோயே. (க)

படையிலங்கு கரமெட்டுடை யான்படிறாகக் கனலேந்திக், கடையிலங்கு மனையிற் பலிகொண்டுணுங் கள்வனுறைகோயில், மடையிலங்கு பொழிலினிழல் வாய்மது வீசும் வலிதாயம், அடைய நின்றவடி யார்க்கடையாவினை யல்லற்றுயர் தானே. (உ)

ஐயனொய்ய னணியன் பிணியில்லவ ரென்றுந் தொழுதேத்தச், செய்யன் வெய்யபடை யேந்தவல்லான் றிருமாதோடுறை கோயில், வையம் வந்து பணியப்பிணி தீர்த்துயர்கின்ற வலிதாயம், உய்யும் வண்ண நினைமின் நினைந்தால் வினை தீரு நலமாமே. (௩)

ஒற்றையேற துடையானடமாடி யோர்பூதப்படை சூழப்
புற்றினாக மரையார்த்துழல்கின்ற வெம்பெம்மான் மடவாளோ
டுற்றகோயி லுலகத் தொளிமல்கிட வுள்கும் வலிதாயம்
பற்றிவாழு மதுவே சரணாவது பாடுமடியார்க்கே. (௪)

புந்தியொன்றி நினைவார் வினையாயின தீரப்பொருளாய
அந்தியன்ன தொரு பேரொளியானமர் கோயிலயலெங்கும்
மந்திவந்து கடுவன்னொடுங் கூடி வணங்கும் வலிதாயம்
சிந்தியாதவவர் தம்மடும் வெந்துயர் தீர்த லெளிதன்றே. (௫)

ஊனியன்ற தலையிற் பலிகொண் டுலகத்துள்ளவரேத்தக்
கானியன்றகரி யின்னுரி போர்த்துழல்கள் வன்சடை தன்மேல்
வானியன்ற பிறைவைத்த வெம்மாதி மகிழும் வலிதாயம்
தேனியன்ற நறுமாமலர் கொண்டு நின்றேத்தத தெளிவீரமே.

கண்ணிறைந்த விழியின்னழலால் வருகாமனுயிர் வீட்டிய், பெண்ணிறைந்த வொருபான் மகிழ் வெய்திப் பேம்மானுறை கோயில, மண்ணிறைந்த புகழ் கொணடடியார்கள் வணங்கும் வலிதாயத், துண்ணிறைந்த பெருமான் கழலேத்த நம் முண்மைக் கதியாமே. (எ)

கடலினஞ்ச மமுதுண்டிமையோர் தொழுதேத்த நடமாடி
அடவிலஙகை யரையன் வலிசெற்றருளம் மானமா கோயில்
மடலிலஙகுகமுகின் பலவின் மதுவிமமும் வலிதாயம்
உடலிலஙகு முயிருளளளவுந தொழவுள்ளத்துயர் போமே. (அ)

பெரியமேரு வரையே சிலையாமலேவுற்று ரெயின் மூன்றும்
எரியவெய்த வொரு வன்னிருவர்க்கறி வொண்ணு வடிவாகும்
எரியதாகி யுறவோஙகி யவன் வலிதாயந தொழுதேத்த
உரியராகவுடையார் பெரியாரெனவுள் குமமுல கோரே. (௯)

ஆசியார மொழியார மண்சாககியரலலாதவர் கூடி
ஏசியீரமிலராய மொழிசெய்தவா சொலலைபபொருளென்னேல்
வாசிதீரவடியாாக்கருள் செய்துவளர்ந்தான் வலிதாயம
பேசுமாாவ முடையாரடியாரெனப் பேணும் பெரியோரே. (௧0)

வண்டுவைகும் மணமல்கிய சோலைவளரும் வலிதாயத்
தண்டவாணனடியுள் குதலாலருண்மாலைத் தமிழாகக்
கண்டல்வைகு கடற்காழியுண் ஞானசம்பந்தன் றமிழ்பத்தும்
கொண்டுவைகியிசை பாடவல்லார் குளிர்வானத்துயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

---

சுப்பிரமணியக்கடவுள் வரப்பிரசாதியாக

திருவண்ணாமலையி லெழுந்தருளியிருந்த

# அருணகிரிநாத சுவாமிகள்

திருவாய்மலாந்தருளிய

# திருப்புகழ்.



## திருவலிதாயம்.

மருமல்லி யார்குழலின் — மடமாதர்
மருளுள் ளிநாயடிய — னலையாமல்,
இருநல்லவாகுமுன — தடிபேண
இனவல்லமானமன — தருளாயோ;
கருநெல்லிமேனியரி — மருகோனே
கனவள்ளியாாகணவ — முருகேசா
திருவல்லிதாயமதி — லுண்றவோனே
திகழவல்லமாதவாகள் — பெருமாளே.



பாடியெனவழங்கும் இத்தலத்திற்கு, வலிதாயம், முலலைவனம், இந்திரபுரி, பிரமபுரி, பங்கயபுரம், தருமபுரம், அஷ்டாக்ஷரப்பதி, மீளிநகர், வன்னீச்சுரம், ஆதித்தபுரம், சிசிபதிநகரம், பஞ்சாக்கரப்பதி, முத்திநகர் எனத் திருநாமங்கள் உண்டு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## ,பாடியென வழங்கும்

# திருவலிதாயபுராணம்.



## காப்பு.

### வாசிந்தி விநாயகர்.

அரசிதது சாமுகம னைததினிலு மேசெல்ல வபவருக்கப்
பரசித்தி வாயநதொளிர வயர்நனி பரிந்தேத்திய பாடியாட
வரசிதது மிகக்கஞுறும பஃறளிசூழ் வலிதாயத நமாந்தஞான
வரசிதது விநாயகனை யெநநாளு மேபணிந்து வநதிபபோமால்.

### வலிதாயநாதர்.

பொலிதாயபூங்கொன்றை நன்னீழலமர்ந்தருளிப்புகழ்மலிந்த, பலிதாய மேனிதிகழ்மெய்யன்பர் பணியேற்றுப் பிணைடைநாளின், மலிதாய வினையகற்றி நினைந்தவையெலாமருளிமன்னி வாழும, வலிதா யநாதனிரு செஙகமலப் பொற்பாதம வாழ்த்துவோமால.

### தாயம்மை.

வேயமமையுறழ்குலவுதடந்தோளினிருபாங்கரினும்விளங்கின்று, பாயமமை யுறலபருகு மலைமகள்வெண் ணலர்மகள்பண் பகர்நதிறைஞ்ச, வாயமமை மலாந்தருளாதருளையிரு கட்கணிப் பால் வழஙகிக்காக்குந், தாயமமையினைப்பரவியுமமைவினையிம் மையினிற்சாடிவாழ்வாம்.

### சுப்பிரமணியர்.

தெள்ளியசெந் தமிழ்க்கழகாய் விளங்குறுநற் றிருப்புக ழைத் தினமும பாடி, யுளளுருகு மன்பர்மன முவகையுறவுயர் செலவமோங்கசசெய்து, வளளிதெய்வயானையிரு மருங்கினிலு மேயிலக வந்து காட்சி, புள்ளிமயின் மேலருளுநம்முருக னிரு சரணைப்போற்றுவோமால்.

சிவபெருமான்றிரு வடியேதமக்குரிய செல்வமெனச் சிந்தித்தேத்தி, நல்லுயர்செந்தமிழ் மொழியிலிசை மலியத்திருமுறைக ணவின்றருளிய, வல்வினைபுனை சமயமேச குரவருத்தங்களை பல வழிநிறசெய்த, தவமுனிவ ராயவிளங்கு நந்நால்வர் பொற் சரணஞ் சாற்றுவேமால்.

## நைமிசாரணியச் சருக்கம்.

செந்தாமரைப்பூம் பொகுட்டில் அரசுவீற்றிருந்தருளும சிருட்டி கர்த்தாவாகிய பிரமதேவனிடத்திற் சன் மார்க்கமாகிய சைவசமயாசாரநெறியினரான சில முனிவர்கள் பூர்வகாலத்திற்சென்று வணங்கித்தாங்கள் தவஞ்செய்தற்குத்தக்க இடந்தெரிவிக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். நான்முகக்கடவுள் ஒரு தருப்பையினை நேமியாக (சக்கரமாக) வளைத்து உருட்டிவிட, அதனைப்பின்னே ஞானத்திற் சிறந்த முனிவர்கள் சென்று அந்த நேமி தங்கிய நைமிசவனத்திலிருந்துகொண்டு அனந்த கல்யாண குணசம்பன்னரான சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்துகொண்டிருந்தனர். அக்காலத்தில் அவ்விடத்தில் வைதிக சிகாமணியாகிய வியாசரது மாணாக்கர் சூதமாமுனிவர் நாவினுக் கருங்கலமாகிய நமசிவாய மந்திரத்தை யுச்சரித்துக் கொண்டே வரக்கண்டு, பரமசந்தோஷத்தா லெதிர்கொண்டு சென்றழைத்துவந்து, ஓராசனத்தினமே லெழுந்தருளச்செய்து அர்க்யபாத்தியம் ஆசமனீய முதலியதந்து சமீபத்திலிருந்து விண்ணப்பஞ் செய்வாராயினர். சிவபக்த சிரோமணியே! தேவர்கள் எப்போதும் அமுதத்தினையே விரும்புகிறார்கள். அதுபோல நாங்கள் எப்போதுஞ் சிவசரித்திரத்திலேயே ஆவலுடையவர்களா யிருக்கின்றோம். ஆதலின், தேவரீர் முன்னொருகாலத்தில் தேவாதி தேவனாகிய சிவபெருமானது தலமான்மியங்களைத் திருவாய்

மலர்நதருளியபோது இரத்தினவனத்திற்குச் * சமீபத்தில், அன்பாக்கு அகண்டசொலவத்தினை யளித்தருளும் ‘திருவலிதாய’ பெனவோர தலமுண்டெனச சொலலி யிருநதா. அததலததது மான்மியததினை யிப்போது விருமபுகினறோமெனறனா. சூதமாமுனிவா கேட்டு அஞசலிதது ஆனநதக் கண்ணீாசோர முனிவாகளை நோக்கிச சொல்லுவாராயினா. தவநெறியிற்சிறநத பெரியோர்களே! அமுதபானம நரைதிரைமுப்பைப போக்குவதேயனறி முததியைத்தருவதன்று. சிவதலமான்மியமோ, நரைதிரை மூப்பைததருவதாகிய தேகபந்தத்தை யொழிதது முத்தியை தரும் அதிசயத்தை யுடையது ஆகையால், இப்போட ஆதியந்தமில்லாத சிவபெருமான் அமாநதருளுமஅ க திருவலிதாய மான்மியததினைச சொல்ல நோநத புண்ணியமே புண்ணியம காசி, காளததி, கருவூா, காஞ்சி, பேருர், அரூா, புகலூா, தில்லை, வன்னிக்குனறம மணிக்குன்றம, சயபுராத முதலிய தலஙகளினுஞ் சிறநது விளங்குவது. இததலததில் வசிததோா, வநதோா, பிறந்தோர், இறநதோா, வலமவநதோா யாருமுத்தியடைவா. நாயேனை யடிமையாககொண்ட திருவலிதாய நாதனது சரணாரவிநதஙகளைச சோமவாரயாதி விசேடதினங்களில் பூரணபக்தியுடன் தொழுது வணங்குகின்றவாகள் சகலசமபததுடனே யுலகில பலநாள் வாழ்ந்து பின்னா தவததினாற்சோதி விமானத்தின்மேலேறிக்கொண்டு அரமபையா வெண்சாமரைப்போடவும், அமாகள் போறறவும், பல்வாத்தியங்கள் மெல்ல முழங்கவும், தேவேநதிராதி தேவாகள் இவ்வளவு வைபவம் நமக்கில்லையே யென்று பொறுமை யடையவும்,

* வடதிருமுலலை வாயிலுககுக கிருதயுகத்தில இரத்தினவனம் எனறும திரேதாயுகததில வில்வவனம் என்றும், துவாபரயுகத்தில் சண்பகவனம் என்றும் கலியுகத்தில் மாலதி (முல்லை வனம் என்றும் பெயர்.)

மகிழ்ந்துசென்று சிவலோகத்தையடைந்து சிவானந்த போகத்தை யனுபவிப்பார்கள். இத்தலத்திற் செய்யும் தருமமொன்று கோடியாக வளரும். இத்தலத்தினுக்குப் பாடி, முததிநகா, முல்லைவனம, பஞ்சாக்கர பதி, தருமபுரம், அஷ்டாக்ஷரபதி, பங்கயபுரி, இந்திரபுரி, அதித்தநகர், ரிசிநகா எனப் பலபெயருண்டு. இத்தலத்தின மகிமை முழுவதினையும் எனனொரு நாவாற சொல்லுந்தரமன்று. ஆயினுஞ் சமபுசப்த வாசகியார்த்தராய் விளங்குஞ் சிவபெருமானாகிய வலிதாயநாதன் திருவடிகளை என்மனதிற சிநதிததுக் கூடியவரையில் சொல்லுகினறேன ; ஒருமனதாய்க் கேளுஙகளென்று போதசாகரமாகிய சூதமாமுனிவா சொல்லத் தொடங்கினர்,

நைமிசாரணியச் சருக்க முறறிற்று.

---

## கமலவல்லியர் பூசித்த சருக்கம்.

சிவயோகிகளே ! சதுாமுகக கடவுளாகிய பிரமதேவன புததிரிகளாகிய கமலை, வல்லியெனனு மிருவர்கள் சர்வலோக வாதாராபூதனுகிய பரிபூரண சச்சிதாநந்த சிவபெருமானைத தஙகட்குக கணவனாகக் கொள்ளக் கருதித் தங்கள் தநதையினை யடைநது நமஸ்காரஞ்செய்து எங்கள் பிதாவே ! நாங்கள் மனதில் கொண்டிருக்கும சங்காப்பமானது எங்கட்குப் பலிக்க வேண்டுமாதலை நாங்கள் செய்யவேண்டிய காரியமென்ன கட்டளையிட்டருள வேண்டுமென விரைநதுகேட்க நான்முகன் தனது புத்திரிகளை நோககிக் குழநதைகாள் ! நீங்கள் கொண்டவெணணம மிக வருமையானது யாரும் வியக்கத்தக்கது. அது இலேசில் முடியக்கூடியதன்று. ஆயினும எவர்கட்கும் எத்தகைய சித்தியும் வெகு சீக்கிரத்தில் அடைய விருமபினால் சிவலிங்க பூஜையே தக்கது. அத்தகைய பூசை உள்ளங்கை

நெல்லிக்கனிபோ லுதவுமென்றனர். இதனைக்கேட்ட கமலையும், வல்லியுந் தன்றந்தையிடத் துவிடைபெற்று, அதி விரைவாகத் தென்றிசை நாடி ஸகலாலங்காரமும் அழகும் வாய்ந்த உன்னதமான விருட்சங்களாலடர்ந்த ஒரு வனத்தினை யடைந்து தவஞ்செய்து வருகையில் எம்பெருமான திருவருள் சுரந்து காட்சி கொடுத்துப் பெண்மணிகாள்! உங்கள் கோரிக்கை யென்னவென அவர்களெழுந்து வணங்கி ஐயனே அடியேம் தேவரீரை விவாகஞ் செய்துகொள்ளக்கருதி இவ்விரதம் பூண்டுள்ளோம் அடிமைகளை ஆளுதியெனலும், சிவபெருமான கலகலென்னநகைத்துப் பாவைமீர்! நாம் நமது தேகத்தினைப் பார்வதியாருக்குப் பகிர்ந்து கொடுத்து விட்டமையின், இனி வேறொருவரை மணஞ்செய்யோம். ஆயினும் நீவிர் விரும்பி யியற்றிய தவத்திற்குப் பலன்கொடுக்கவேண்டி யிருத்தலின் சொல்லுகின்றோம் கேட்பீராக. நம்முடைய ஆநந்தவடிவமாய்ப் பிரணவசொரூபியாய நம்மைக்காட்டிலுஞ் சிறிதும் வேறாகாது விளங்கும் விநாயகமூர்த்தி சில நாளைக்குள் இத்தலத்தினை யடைவன். அவனை விவாகஞ்செய்து கொள்வீராக அதுகாறும் இவ்விடத்திலேயே வாழ்ந்துகொண்டிருப்பீராக, இன்னும் வேண்டியவற்றைக் கேட்பீராகவென, மாதர் அஞ்சலித்து அண்ணலே! எங்கட்கு அநாதியாயுள்ள பாசமனைத்து மொழியவேண்டும் இத்தலம் எத்தலத்திற்கு மாதிதலமாக வேண்டுமென, அங்ஙனமே வரமளித்து அவர்கட்கு அவர்கள் தவமியற்றிய பாடல விருட்சத்தின் கீழ் சுயம்பு மூர்த்தியாகச் சிவலிங்கமாயினர். அவ்வரிவையர்கள் அப்போது இருவரும் பாலிநதியில் ஸ்நானம் செய்து விபூதி உருத்திராட்சம் பூண்டு, பாடல விருட்சத்தின் கீழ் பூசைசெய்வதாகச் சங்கற்பஞ் செய்துகொண்டு புட்பசுத்தி முதல் பூதசுத்திவரையுஞ் செய்து மானத பூசைபுரிந்து பணமலரும் வாசனைத்

திரவியமுங் கலந்த தெண்ணீரால் பாத்தியம், ஆசமனம் அருக்கியங்களைப் பரிசுத்தமாக்கிச் சத்தியாதி சருக விளங்க வாய்த்திருக்கும் ஆசனத்தின்மேல் வீற்றிருக்கின்ற சதாசிவ மூர்த்தியாய் எங்கும் நிறைந்திருக்கும் பரஞ்சோதியானவரும் திருவலிதாயத்தில் திருவிளக்காக விளங்குகின்றவரும் அடி நடு முடி யில்லாமல் எங்கும் வியாபித்திருக்கின்ற அகண்ட பரிபூரண நிமல நித்தியானந்தச் செல்வருமாகிய வலிதாய நாதரை, அஞ்ஞான விருளைப் பிளந்து எறிய வல்ல மெய்ஞ்ஞானக்கண்ணால் கண்டு தெளிந்து துதிசெய்து பாதங்களில் பாத்தியமும், திருமுகத்தில் ஆசமனமும் திருமுடியில் அருக்கியமுங் கொடுத்து மதுபருக்கம் அளித்துச் சிவாகம விதிப்படி மறுபடியும் ஆசமனங் கொடுத்து நெய்யும் பாலுங் கலந்து சமைக்கப்பட்ட திருவமுதளித்துத் திரு எண்ணெய்க்காப்பும் திருநெல்லிக்காப்பும் திருமஞ்சட்காப்புமிட்டுப் பஞ்சகவ்வியத்தாலும் பஞ்சாமிர்தத்தாலும் பலகுடங்களில் நிறைந்திருக்கும் பாலாலும், தயிராலும், நெய்யாலும், இளநீராலும் அபிஷேகஞ்செய்தும், கரும்பின் இரசத்தால் அபிஷேகஞ்செய்தும், பல கனிவகைகளால் அபிஷேகஞ்செய்தும், சந்தனாபிஷேகஞ் செய்தும், பரிசுத்த தீர்த்தத்தால் உருத்திர மந்திரத்தைச் சொல்லி விதிப்படி பூரணாபிஷேகஞ் செய்தும் மெல்லிய நூலாடையெடுத்துத் திருமேனியை மெத்தென்று ஒற்றித் தேவர்களும் விரும்பத்தக்க செம்பட்டாடையும் வெண்பூணூலும் சாத்தியும் பூஷணவர்க்கங்களையும் பூமாலைகளையும் அணிந்தும், தூபதீபங்காட்டி அறுசுவையமைந்திருக்கும் நால்வகை யுண்டிகளைத் திருவமுது செய்வித்துச் சீத ஜலங்கொண்டு திருக்கைகளையும் செம்பவளத் திருவாயையும் பூசி, மந்திரஞ்சொல்லித் தாம்பூலமும், தக்கோலமு மளித்துத் தீபதூபங்களை யெல்லாம் முறையாகக்காட்டி, மனமகிழ்ந்து, திருஷ்



திருவேதாரண்யத்திலே பாதிரி வருக்ஷத்தின்கீழ் சுயம்புலிங்கமூர்த்தியை விநாயகர் பூஜித்துக் கமலை
வல்லி யிருவர்களை விவாகம் செய்தது.

டிப் பரிகாரமின்ன ஆலாத்தி சுழற்றிப் பலமுறை பிரதட்சணம் பண்ணி வணங்கி வாழ்த்தி மனதினிடமாக மாறாதிருக்கும் பஞ்சாட்சர மகா மந்திரத்தினைக் கணித்து இவைபோலவனவெல்லாஞ் செய்து பேரன்புடன் பூஜையைப் பூர்த்திசெய்து வாழ்ந்து வந்தனர். இவ்விருவருமக் காமியமடைந்து தவஞ்செய்தமையின் இத்தலத்திற்குக் காமியவன மெனவும், முல்லைமலர்கொண்டு அருச்சித்தமையின் முல்லைவன மெனவும் வாய்த்தது.

சமலவல்லியார் பூசித்த சருக்கம் முற்றிற்று.



## விநாயகர் விவாக சருக்கம்.

சிவஞானச் செல்வர்களே! முன்னொரு காலத்தில் தேவர்களொருங்கு கூடி, தவஞ்செய்து பல வரங்களைப் பெற்றுக் கன்னிகாரியாய் வாழ்ந்த கயமுகாசுரன் உபத்திரவம் பொறுக்கமாட்டாது மனக்கவலையடைந்து சிவபெருமான் சந்நிதானத்தில் விண்ணப்பிக்க, அவர் கருணைகூர்ந்து அவ்விடுக்கணைச் சீக்கிரம் நீக்கியருளுவதாகக் கூறி யவர்களை யனுப்பியபின், சிவபெருமான் தன் பத்தினியாகிய பார்வதியுடன் கைலையினொருபாங்கர் ஓவியம்பல தீட்டியிருந்த மண்டபத்தில் எழுந்தருளி வேடிக்கை பார்த்து வருங்காலையில் ஒரு பக்கத்தில் எழுகோடி மகாமந்திரங்களாகு மிருபிரணவமதுவினைக் கண்டு பார்வதியார் இதுவென்னவென்று கேட்க, சுவாமி, பெண்ணே! இவ்விரண்டு மனுக்களே வேதாகமங்க ளுற்பத்தியாகிறதற்குக் காரணமாயுள்ளன. அது சத்திப்பிரணவம் இது சிவப்பிரணவ மெனக்கூறி இருவருமுறையே இருமந்திரங்களை நோக்கிச் சிந்தித்த மாத்திரத்தில், அவ்விரண்டு பிரணவங்களு மொன்றுடனொன்றளாவ அவ்விரண்டினின்றும் சத்தி சத்தர்கள் உருவெலாந்திரண்டு வேழ

மாமுகவும விளங்கு மைங்கரமும மென்புரி நாலும் வியனுறு கிணகிணியரையுமாக விநாயகா அவதரித்த னர். அம்மையப்ப ரிருவரு மவ்விநாயகரை யழைத்து மடிமீதிருத்தி முத்தமிட்டுக் குழந்தாய்! நீ தேவர்கள் சமரட்சார்த்தமாகச் சென்று கயமாமுகனைக் கொன்று விண்டுவின சாபத்தினை யொழித்து உன்னையே விரும்பித் தென்றிசையில் தவஞ்செய்துகொண் டிருக்கிற பெண்களிருவரையு மணந்து வரக்கடவா யென்று இரண்டாயிரம வெள்ளம பூதகணங்களையும் அனேகமான வாயுதங்களையு முதவியனுப்பினா. விநாயகா அசலனென்னு பூதனமீதாரோ கணித்துக் கொண்டு கயமுகாசுரன அரசுசெய்திருக்கும மதங்க நகரத்திற் கருகில வந்தனா. அசுரன தெரிந்து வடவானலத்தைப் போற கோபித்துச் சாவாயுத பாணியாய்த் தேரிலேறி இராக்கத வெள்ளஞ் சூழ்ந்துவா இரணபேரி செயபேரி முதலிய வாத்தியங்கள் புடைமுழ மதிரமுழங்கச சென்று கணபதிசந்நிதியில நெருங்கினன். அப்போது பூதப்படைகளும அவுணவெள்ளங்களும கோபாவேசராய் வெயிலும இருளும நேர்ந்ததைப் போலச சீறிப் பாணங்கள் ஆயுதவகைகள் பருவதங்கள் முதலானவைகளை யொன்றனொன்றாக ஒருவாமே லொருவா பிரயோகித்துச் சண்டைதொடுத்த அவுணாகளில பலா மாளக கண்டு மற்றவாகள் விதிர்த்து நிறக திருவாகமில்லாமற பல திசையினுமோடி யொளித்தார்கள். அத்தருணத்தில் பூதப்படைகள ஜெயவுற்சாகத்துடன பயமுற்று மேலிட்டு வருவதைக கயமுகன கண்டு காலத்தைப்போற சீறித்தேரை நடாத்தி பூதப்படைகளின் மீது சரமாரி பொழிந்து சல்லடை கண்களாகத் துளைத்து அதனுற்செய்யப் பூதப்படைகள் பின்வாங்க, அப்போது விநாயகாவரக் கயமுகன அக்கினிபோற் சீறித் தனது வில்லைவளைத்து அண்டங்களதிரக் குணத்தொனி செய்து அளவற்ற கொடிய பா

ணங்களைப் பிரயோகிக்க அவைக ளெரிந்து புகைந்து வருவதைவிநாயகர் கண்டு தமது திருக்கரத்தில் விளங்கும் எழு வாயுதத்தினற் பொடிசெய்து, அவன் கரத்திற்பற்றிய வில்லையுங் கண்டித்தார், பாதகன் வெகுண்டு மற்றொரு சிலையை யெடுத்து வளைப்பதற்கு முன்னங் கணபதி அதனையுந் துண்டிக்க, அவன் வலியதண்டமொன்றை எடுத்துச் சுழற்றி வீச, அதையுமுறித்து அவன் மார்பு பிளக்க மோதினர். அதனற் கயமுகன் கோபமுற்று நிற்பதைக்கண்ட இராக்கத சேனைகளும் படைத்தலைவரும் திரண்டு திவ்வியபாணங்கள், தண்டம், பிண்டி, பாலம், எழு, முதலிய வாயுதங்களைச் சோனை மாரியைப்போலச் [illegible], சிங்கநாதங்கள் செய்தார்கள். அப்போது கணபதி தமது திருக்கரத்திலிருந்த பாசத்தை வீசிப் படைகளையும் இரதகஜதுரகபதாதிகளையுங் கட்டி உடனே கணிச்சியைச் செலுத்திச் சின்னபின்னப்படக் கண்டித்தார். அதைக் கயமுகன் கண்டு நடுங்கி வருந்திக் கோபமுற்றுப் பாசுபத முதலிய தேவபடைகளை யுன்னினபின் ஒன்றாகப் பிரயோகிக்க அவை நெருங்கி ஐயனுடைய பாதகமலங்களில் பணிந்திருப்பதை யறிந்து, கோபமும், மானமும் மனத்தினை வாட்ட ஒன்றுந் தோன்றாது கலங்கி யிருந்தான். அத்தருணத்தில் ஐங்கரக் கடவுள் அவன் ஆயுதங்களாற் கொல்லப்படாத வரத்தைப் பெற்றிருப்பதைத் தெரிந்து, தமது கோட்டினென்றை முறித்துச் செலுத்தினர். அது விரைந்துவந்து கயமுகனை யிருகூறகப் பிளந்து தள்ளி வானத்தெழுந்து கங்கையில் மூழ்கிவந்து சிவகுமாரன் கரத்தில் நின்றது. கயமுகன் சிவபிரானிடத்திற் பெற்ற வரத்தினுல் அங்குப் பருத்தவடிவினையும், அக்கினியைப் போலச் சிவந்த கண்ணையும்பெற்ற பெருச்சாளியாகச் சீறிப்பாய்ந்து வரும்போது, அசலன் தோளிலிருந்த கணபதி அதன் முதுகி லாரோகணித்து, எந்நாளும் நம்மைச் சுமந்து

திரிவாயென்று நடத்தினர். இந்திரன் முதலியோர் ஐயனார்நமைப் பாடிக் குதித்து மலரைப் பொழிந்து தோத்திரித்து வாழ்த்தி, எங்களை யாட்கொண்ட தெய்வமே! நாங்கள் கயமுகாசுரனுக்குச் செய்த பணிவிடைகளை தேவரீருக்கு நடத்தவிரும்பினோம். அவைகளை அங்கீகரித்துக் காக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அவர் மகிழ்ந்தனர். அக்காலத்தில் தேவர்கள் முறைமுறைக் கூடிக்கொண்டு செவிகளைப் பற்றிப் பாதங்களைச் சேர்த்துத் தாழ்ந்தெழுந்து போற்றி செய்து இறைவனே! இவ்வாறு உலகத்தவர்கள் நடந்து கொண்டால், அவர்கள் இஷ்ட சித்திகளையும் பூர்த்தி செய்துவிப்பாய் எனக் கேட்டுக்கொண்டனர்.

பின்பர், பிரமன் முதலியார்சூழ ஒரு பாலைவனத்தின் வழியே வருகையில் ஒருமரத்தின் பொந்தில் குருட்டுப் பாம்பாய்க் கிடந்த விஷ்ணுமூர்த்தி யானவர் தெரிந்து தன்சாப நீங்கப்பெற்று அம்மூர்த்தியினைச் சுற்றி வணங்க அப்பெருமான் நாரணனை நோக்கி ஐய! நீ இவ்விடத்தில் வந்ததற்கு காரணமென்னை யென, திருமால் வணங்கி, முகாரப்பொருளே! ஒருநாள் தேவரீருமையம்மையும் தாயாரும் ஒரு திருவிளையாட்டைப் பகடசாலை யாடிவருகையில் என்னைச் சாட்சியாக வைத்தனர். அவ்விளையாட்டில் "எமது பெருமான் தோற்றும் பார்வதி செயித்தும், நான் மேல் வருவதை யுணராமல் சிவபெருமான் செயித்தாரெனக் கேட்ட வம்மையார் கோபங்கொண்டு என்னைக் குருட்டுப் பாம்பாகப் போகக் கடவையென்று சபித்தனர். பரமேஸ்வரன் என்மீது கிருபைகூர்ந்து தேவரீர் இவ்வழியாக வருகிற வரையிலிவ்விடத்தி லிருக்கவும் தேவரீர் இப்பாலைவனம் வந்தவுடன் என் சாபம் விமோசனமாகு மெனவும் கட்டளையிட்டிருந்தனர். அங்ஙனமே இன்று சாப நீங்கித் தரிசிக்கப் பெற்றேனென்று கூறி

விடைபெற றேகினா. அதனபின் விநாயகா தென்றி
சை நோககிவந்து கொண்டிருககையில பறபல மலர்
பத்துத் திசையிலும பரிமளம் வீசத் தருநத முலலை
வனத்தினை யடைநது அவ்விடததினையே பாடி விடா
கக் கொண்டு தமது சேனையையும ஆயுதஙகளையும்
அவ்விடம வைத்துப பரிடங்களின பசிதவிரதது அவ்
வனததில் பாடலி விருட்சததின கீழ் தவஞ்செய்து
கொணடிருககும பிரமன் புத்திரிகளைக் கண்டு தரிச
னந்தநது அவாகளை ஞானவுருவாககிப பாவையரே!
நீர நமமை நோக்கி இவ்விடம தவம புரிநதமையின
இதநலம முநதிநகரபொலை ஒஙகுவநாக நாமின்றைறகு
இப்பாடல விருடசததின ழேழுந்தருளியிருக்கும
சிவலிஙகப பெருமானைப பூசிதமம வமமினென ற
ழைநதுகொண்டு ஆ...ய மன்று பூசைசெய்ய
வாரமபிததனா. அபபாநாகள இருபபாநதகிலுமிருநது
சிவபூசைக்கு வேண்டிய உபகரணஙகளை யெடுத்துக்
கொடுகக விநாயகா கணிராச செய்பால வேநன் முத
லிய கொணடு அபிடேகிதது பாலிகை, முலலை, சண்ப
கம, புன்னிநதப, கூவிளம, குவளை, புனனை, பாரிசாதம,
கொன்றை, பாடலம, செயதல, மகிழம, நநதிபாவட
டம, அறுகு, தும்பை, குடமலலி, விருட்சி, பன்னீர,
முதலிய மலாகளைகசொண் டருசசிதது அறுசுவையு
டன கூடிய பானமய படைநதது பலவாறு தோத்த
ரித்து, விடைபெற்று பிரமன புததிரிகளைக் கணேச
முாதகி அத்கலத்திலேயே விவாகஞ் செய்துகொண்டு
சிலநாள் தஙகி அமபாநதாகளுடன கைலையை யடைந
தனா.

விநாயகா விவாகசசருகக முற்றிற்று.

---

## பரத்துவாசர் பூசித்த சருக்கம்.

சிவானந்தச் செல்வர்களே! சகல கலைகளினும் வல்லவராகிய உதத்தியர் என்னுமோர் முனிவரும், அவரது மனைவாழ்க்கைக்குரிய கற்பினிற் சிறந்த மம தையென்பவளும் இல்லறவாழ்க்கை நெறிதவறாமல் நடந்துவருகையில், புத்திரப்பேறின்றிப் பரிபூரண சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமானை நோக்கித் தவங்கிடக்க, மமதையென்பவள் கருப்பம் வாய்ந்த னள். அதிரூப சவுந்தரியவதியான அம்மமதையின் பரியகூந்தலினையும், பவளவாயினையும், மதுரமான சொல்லினையும், தேமறபடாந்த தனங்களினையும், தளிர் போன்றகைகளினையும், விசாலமான அல்குலினையும், உதத்திய முனிவரின் தம்பியாகிய வியாழ முனிவர் கண்டு அவள் தனித்திருக்குஞ் சமயத்தில் அவளைச் சமீபித்து இங்கித சரச சல்லாபபோக வார்த்தைகளை நயமாகப் பேசித் தன்னை யணையும்படி இரக்கத்துடன் வேண்டிக்கொண்டனர். அவள், தனது மைத்துனனை நோக்கிக் கொழுந்தனே! நீ இங்ஙன நினைத்தல் தகாத காரியம் இதனால் நான் கற்பிழந்தவளாகிவிடுதலே யன்றி, உன்றனுக்கும் உன்றமையனுக்கும் பகை விளை யும். தமையனுக்குப் புத்திரப்பேறில்லாத காலத்தில் தம்பியைக்கொண்டு புத்திரனை உண்டாக்கிக் கொள்ள லாமெனல் இந்தயுக தருமமாயினும், நானிப்போது உன் தமயனுக்கே கருப்பம் வாய்ந்திருக்கின்றேன். ஆதலின் அடாதகாரியத்திற் பிரவேசிப்பது அழ கன்று. பாவத்தினையும் பழியினையும் பழிப்பினையுந் தேடிக்கொள்ளுதல் நயமரபிற்கு நலமாமோ என்றனள். வியாழபகவான் தனது மதனியார் வார்த்தைகளைச் சிறி துங் கவனியாது மேல்விழுந்து, வலாத்காரமாகப் புண ர்ந்தனர். அப்போது மமதையின் கருப்பத்திலிருந்த சிசுவானது சிவானுக் கிரகத்தா லுற்பத்தியா யிருப்ப




பரத்துவாசர் சிவபெருமானைப் பூசித்து ரிஷபாரூடரைத் தரிசித்து, சுவாமிபெயர் வலிதாயநாதரென
யும் தான் எடுத்ததீர்த்தம் பரத்துவாச தீர்த்தமெனவும், இது வலிதாயத் தலமெனவும் வழங்க வரம்பெற்றது

தால், இவ்வுண்மை தெரிந்துகொண்டு, வியாழ முனியின் வீரியத்தை யுள்ளே பிரவேசிக்கவொட்டாது தடுத்து வெளிப்படுத்தி விட்டது. வியாழமுனிவரிது தெரிந்து கருப்பத்தி லிருக்கும குழநதை குருடாகப் போகக்கடவது என்று சபித்தனா. வெளிப்பட்ட வீரியம் தேவ குருவாகிய வியாழபகவானுடைய தாகமின் அது வீணாகாதபடி தேவாகள் ஒரு பரதுவாச பட்சியினை* யுண்ணுமபடி செயதனர். அப்பறவையினின்றும் பரத்துவாச முனிவா † பிறநதனா. மமதை வயிற்றினின்றுங் குருடாகப் பிறநத தீாக்கதமுனிவர் சிலநாளைக்குப்பினனா, தனது சிறிய *தந்தையாராகிய வியாழமுனிவரை நோக்கித தநதையே! நீ சிறிதும் விவேகமினறி யென்றாயைப் புணாந்ததல்லாமல் என்னையும அநதகனாகப்போமபடி சபித்தாய். ஆகையால், உனமனைவி யுனமாணுக்க ‡ னொருவனபால் புத்திரனைப்பெறறுக்கொள்ளககடவன் எனறனர். பின்பு பிரகஸபதியாகிய, வியாழபகவானுக்குப் பிறநத பரத்துவாசா பறவையினிடமாக வுதித்த தனது ஜென்மத்திற்குக்காரணமான வினையினை நினைநது நினைநது துக்கித்துத் தலயாத்திரை செய்யக்கருதிப் புண்ணிய பூமியாகிய பரத கண்டததிலுள்ள சிவதலங்களை யெல்லாந தரிசித்துக்கொண்டே தென்றேயநோக்கி வருகையில், அரும்புகளையும், மலாகளையுமுடைய சோலைகளாலும், சண்பகவிருட்சங்களாலும, வாிசைவாிசையான தென்

---

* பரத்துவாசம்=கரிக்குருவி. இது வலியனென்றும, கருங்குருமானென்றும் வழஙகுகிறது.

† சதாசிவமூாத்தியினது திருமுகஙகளிலுண்டான பஞ்சபிர்மவிருடிகளி லொருவராகிய பரதுவாசர் இவரன்று.

‡ இச்சரித்திரம் திருவான்மியூர்ப் புராணத்துச சந்திரன்காமகாசப்படலத்திற் காண்க.

னமரங்களாலும், வாழைகளாலும், சூழப்பட்ட தாம
ரை மிகுந்திருக்கும் சுனைகள் நிறைந்த வொரு வனத்
தினைக்கண்டு அதில் வேதரூபமாகிய கொன்றை விருட்
சத்தி னடியின் சுயம்புவாக வெழுந்தருளி யிருக்கு
மொரு சிவலிங்கப்பெருமானைத் தரிசித்தவுடன் தனது
மனதிலிருந்த சஞ்சலமெலா நீங்கி, ஆனந்த மேலிடக்
கண்டு ஆச்சரியமடைந்து அவ்விடத்திலோர் தீர்த்த
முண்டாக்கி வெகுகாலம் அப்பெருமானைப் பூரண
பத்தியுடன் பூசித்துக்கொண்டிருந்தனர். ஓர்நாள்,
சர்வ சகத்காரணர் பிரபுவாகிய சிவபெருமான் தரும
தேவதையான இடபவாகனத்தின்மேல் மாங்குயில்
போல மதுரவசனங்களை வாணிக்குமலைமகள் சமே
தராய் விநாயகர், சுப்பிரமணியர், திருநந்திதேவர்,
முனிவர்கள் சூழ்க் காட்சிகொடுத்தருளினர். அரிய
யற்கரிய திருவடிகளைப் பரத்துவாசமுனிவர் தரி
சித்து அடியற்ற மரம்போற் கீழ்விழுந்து எழுந்து
வலம்வந்து கூத்தாடி இருகரங்களையு மஞ்சலித்து,
ஆனந்தபாஷ்பஞ் சொரிய ஏ சங்கரா! சதாசிவா! சம்
போ! சந்திரா! கங்காதரா! கங்காளா! கண்ணுத
லோய! கயிலையாளி! கறைமிடற்றோய்! காயாநாயக
காலகாலா போற்றி போற்றி யெனப்பிரார்த்தவுடன், அடி
யார்க்கருள் சுரக்கு மண்ணல், "குழந்தாய்! நின் பூசை
யை ஏற்றுக் களிப்புற்றனம். உன் மனதிலுண்டா
யிருக்கும் கவலையை யொழிக. உன் பிறப்பை யுன்னி
யினியாரு முன்னை யிகழார்கள். நீ முனிவர்கட்குள்
நாயகமாக விளங்குக. அரசர் குருவாகத் துரோணா
சாரிய னென்னு மோர் மைந்தனைப் பெற்றுச் சுகமாக
இருக்கக் கடவை" என ஆசிமொழி தந்தருளினர்.
பரத்துவாசர் சுவாமியை நோக்கி, "பெருமானே!
அடியேனுடைய பூசையினை யுரிமையாக ஏற்றுக்கொ
ண்ட தேவரீருக்குப் வலிதாயநாதன்" என்றும் இவ்



திருவலிதாயத்தில தேவகுருவாகிய பிரகஸபதி, வலிதாயநாதரைப் பூசிதது, தன பாபததைப்போக்கி ரிஷபாரூடரைத் தெரிசித்தது.

அன்ப உன்பாவம் உன்னை விட்டொழிந்தது. இனித் தேவர்களெல்லாம் உன்னைத் தங்கள் குருவெனக் கொண்டாடுவதிற் றடையில்லை. சுகமாக வாழக்கடவை யென்று திருவாய் மலர்ந்தருளிச் சிவலிங்கத்துண் மறைந்தருளினார்.

தேவகுரு பாவநாசச்சருக்க முற்றிற்று.

---

## கேசவன் பாவநாசச் சருக்கம்.

சிவானுபூதிமான்களே! தாமரை யாசனத்தில் வீற்றிருக்கும் நான்முகக் கடவுளின் புத்திரனாகிய தக்கன் றனக்குண்டாயிருந்த அதிகார செருக்கினால், அகில லோகநாயகனாகிய சிவபெருமானை விலக்கித் திருமால் முதலிய தேவர்கள் சூழவொரு வேள்வி செய்யத் தொடங்கினன். அதனை யறிந்த நாரதமுனிவர் வெள்ளியங்கிரியை யடைந்து விமலனிடத்தில் விண்ணப்பஞ்செய்தனர். அதனைக் கேட்டுக்கொண்டிருந்த அறுமுகனைப் பெற்றவளாகிய உமாதேவியார் தனது தந்தையாகிய தக்கனடத்தும் வேள்வியைப் பார்க்கும்பொருட்டுத் தனது நாயகனிடத்தில் விடைபெற்று வேள்விச்சாலையை யடைந்தனர். செருக்கே யுருவாயமைந்த தக்கன் அம்மையாரைச் சினத்தொடு கோபித்துப் பற்பல விகடமாகப் பரஞ்சோதியாகிய பசுபதியை நிந்தனை செய்தனன். தேவியுமதனைப் பொறாதவராகி “ஏ, தக்கனே! முக்கண் சோதிப்பிரகாச வடிவாகி சர்வ லோகநாயகனாகிய பெருமானை நீ பழித்தமையினால், உன் வேள்வியானது அழிந்தொழியக்கடவது, உன் றலையறுபட்டுப் போகக்கடவது” என்று சபித்து, அக்கினியை வளர்த்தி யதில் மூழ்கித் தன்னைப் புத்திரியாகப் பெறவேண்டிச் சிவபரஞ்சோதியை நோக்

ஙித தவங்கிடக்கும் இமயவரசன் மகளாக அவதரித்த ருளினர். பின்பு, ததீசியாதி சைவமுனி புங்கவர்கள் தக்கனை நோக்கி, "ஏ! பிரம புத்திரனே! மறையனைத்து மகாதேவனைக் காதபதியென்றும், மேதாபதியென றும், அதவராஜனென்றும், எருநடாதியென்றும் பல நாமங்கள் பாராட்டி யுததரித்திருத்தலை நீ யறிந்தாயில்லையோ? என்ன அனணியமான நம தெய்வங்களோடு சமானமாக ஒரு வார்த்தையாவது மகாதேவரைப் பேசுவானேல், அந்தத் துர்மதி சண்டாளனுவனன்றி, உலகப்பிரசித்தியமா சண்டாளனென்றழைக்கப்படுபவன் சண்டாளனுகான் என்றும் புராணவசனம் கேட்டதில்லையோ? சர்வசிரேஷ்ட பிரபுவாகிய ஏ ருத்திரமூர்த்தி! உன்னை இதரதேவர்களோடு நமஸ காரங்களாலும், அல்ல தோத்திரங்களாலும், ஆராதனங்களாலும் கோபிக்கச் செய்வோம் என்று கருதி யினையும் தோந்திலேயோ? யங்கோ மருநாதி சிவனேயென்று பயந்கலை தரேவிடுமே, ஆகையால் இனியேனும் அகிலலோகமுங் கொடு பெயர் கொண்டவனுக் கவியளிப்பாயாக" என்று பல புத்தி கூறியுங் கேளாதவனுய் மேலும் மேலும் மிசபுந்தனன். இவற்றை யெல்லாம் நந்தி யெம்பெருமான் வாயிலாகக் கைலாசபதி யறிந்துகொண்டு வீரபத்திரக் கடவுளைத் தமது பாலநேத்திரத்தினின்று முண்டாக்கி, "ஏ வீரனே! நம்மை நிந்தித்த தக்கன் வேள்வி புரிகின்றான். நீ அவ்விடஞ் சென்று நமக்கு அவியைக் கேள். கொடுத்தால் வந்துவிடக்கடவாய். மறுத்தானேல், யாகத்தை யழித்து, அவனறிவை யறுத்து, அவனுற்ற தேவர்களைத் தண்டஞ்செய்து வருவாய்" என்று ஆஞ்ஞாபித்தனர். உடனே வீரபத்திரர் தன் றந்தையாரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வேள்விச்சாலையை யடைந்து தக்கனை நோக்கி, "ஏ தக்கனே! சர்வைஸ்வரிய சம்பன்னரான சிவபெருமானுக்குரிய அவிர்ப்பாகத்



அநுமார் திருவலத்தாயிரத்தை பூசித்து, தாஞ்செய்த அபராதத்தைப் போக்கிக் கொண்டு தன் பெயரால் ஒரு தீர்த்தமெடுத்து, இப்பரமலிங்கத்தை வணங்கி, அவர்கள் உலகத்திலுள்ள எல்லா இலிங்கங்களையும் வணங்கினபலன் அடையும் வரம்பெற்றது.

க்கப்படாமல், எந்நாளும் அறுசுவையோடுங் கூடிய பிர சாதங் கிடைக்கப்பெற்று வாழ்ந்து, பின் வைகுந்தப் பதவியினைப் பெறுவார்கள். இவ்விடத்தில் துவாபர யுகமுடிவில் தாமோதரனாரும் சிலகாலந் தங்கி வாழ்ந்து வலிதாயநாதனை தரிசனஞ்செய்துகொண்டிருந்து சென்றனர். இந்திரன் பூசித்தமையின் வலிதாயத் திற்கு இந்திரபுரி யெனவும் பெயருண்டு.

கோவன் பாவநாசச் சருக்க முற்றிற்று.

## அனுமா ரபராத மன்னிப்புச் சருக்கம்.

சிவகாருண்ணிய முனிவர்களே! பூர்வத்தில் இலங்கைக் கதிபனும் இராவணன் சந்நியாசிவேடம் பூண்டு, தண்டகாருண்ணியத்தில் பிரவிருத்தத்தோன்றலாகும் இராமன் பத்தினியாகிய சீதாபிராட்டியை யபகரித்துக்கொண்டு இலங்கைக்குப் போய்விட்டான். வீராதிவீரனாகிய இராமன் பெரிதுயருந்து தன் றம்பி இலட்சுமணனுடன் வருந்திக் காடெல்லாந்தேடி, மறை யுருவமைந்த மாவடியில் வீற்றிருந்த வரப்பிர நாதனைப்பணிந்து பாசுபதாத்திரம் பெற்று, கிஷ்கிந் தையைச்சேர்ந்து சுக்கிரீவன் சேனையுடன் போய், சேது பந்தனஞ்செய்து கடலைக்கடந்து, இராவணாதி யசுரர் களைக் கொன்று, சீதையைச் சிறை மீட்டுக்கொண்டு திருப்பிக் கந்தமாதனத்தில் வந்தவுடன், இராவண னது பிரமகத்தியானது இராமனைச் சூழ்ந்துகொண்டு இமைப்பொழுது நீங்காமல் உடன்வரும், தனது மார் பினைத் தட்டும், முகத்தினைச் சுளித்துக்கொண்டு சண் டைக்குவரும், ஆரவாரஞ்செய்யும், உதட்டினைமடிக் கும், கூரிய பற்களை நெறநெறவெனக் கடிக்கும், கீழே விழும், மேலேயெழும்பும், என்னை யெதிர்ப்பவனாரடா

மாருதிமைந்த பெரியோர் குறித்த சுபமுகூர்த்தம் தவ றுதபடி செய்யவேண்டி நேரிட்டது, வேறொன்றும் நினைத்திலேன் நான்ரூபித்த இராமலிங்கத்தின் முன் னர் நீ கொணர்ந்த சிவலிங்கத்தினைப் பிரதிட்டை செய்து பூசைசெய், இல்லையேல், என்னால் பிரதிட் டிக்த இலிங்கத்தினைப் பெயர்த்து நினைகையுற்ற பெரு மானை அவ்விடத்தில் ரூபிப்பாயாக" என்றனர்.

வாயுவின் மைந்தனை அனுமார் கேட்டவுடன் ஆனந்தங்கொண்டு கிளம்பி, இராமலிங்கத்தினைத் தன் னிரு கரங்களாலும் பிடித்தசைத்து மசையாததைக் கண்டு தற்போக்குற்றுத் தன வாலால் பலவலயஞ் சுற் றித் தன் புயவலிகொண்டு ஆகாயத்தி லெழும்பிய வுடன், தன் பெரியதொரு வாலற்றுத் திடீரெனக் கீழேவிழுந்து மூர்ச்சித்துப் போயினன். கண்ட இரா மர், இலக்குமணர், சீதை முதலியோர் அனுமாரது அகன்ற மார்பின்மேல் விழுந்து வாய்விட்டழுதயர்ந்த னர். பின்னொருவாறு தெளிந்து, அனுமாரை இராமர் தனது பலைபோன்ற தோளின்மீது சாய்த்துக்கொண்டு, "மாருதிசிங்கமே! என்செய்வேன்! என்செய்வேன்! பம்பைநதி தீரத்திலெனைச் சேர்ந்து தென்னையாவை மாற்றினை! சுக்ரீவனுக்கும் எனக்குஞ்சிநேகஞ் செய்து வைத்தனை! கடலைக்கடந்தனை! மைநாகப்பருவதத்தை வீசியெறிந்தனை! அம்பலையரக்கி அலரவரக்கினை! இலங் காதேவியை இயமெனு முன்னூற்றினை? அசோக வனத் தினை ஆக்கிரமித்த் தழித்தனை! எண்பதினாயிரமரக்கரை மண்படச் சாடினை! சம்புமாலியைச் சாயப்பெறவாட் டினை! அட்சகுமாரனை அழிவுறயறைந்தனை! இலங்கை முழுதும் வெந்தழல மூட்டினை! இளமூலைச் சீதையை யென்பால் இன்புறுசேர்த்தனை! ஆ! என்பொருட்டு இவ்வளவு பேருபகாரஞ் செய்த உனக்குப் பிரதியுப காரம் நானென்ன் செய்தனன்! ஒன்றுங்காணேன் குழ ந்தாய்! நின் கண்ணைத்திறந்து என் முகத்தினைப்பார்;

அந்தோ உன்னை எவ்வனம் பிரிந்துய்வேன் என் கண்ணிற் கருமணியே'' என்றனா.

இத்தகைய வமுக்மொழிகள் அகில குமாரனாகிய அனுமன் செவியி னுழைந்தவுடன் சிறிது கோபந் தீர்ந்து எழுந்து, இராமலிங்கத்துக்கு வடதிசையில் அனுமலிங்கந் தாபித்துப் பூசித்து தான, யாவுமெல்லபயாந்தன்மை பொருந்திய சிவபெருமான் மாட்டுச்செய்த அபசாரத்தை யெண்ணி யெண்ணி நெஞ்சந் துணுக்குற்று வருந்தியிருக்கையில், மகத்தியா மேந்திய ஞான சிரோமணியாகிய நாரதமுனிவா அவணடைந்து நடந்த யாவற்றையும் விசாரித்துத்தகருணைகூர்ந்து கூறுவாராயினா. ''சஞ்சீவிராய நீ அம்பிகை பாகனுக்கியற்றிய அபராதமொழிய வேண்டுமாயின், கேள் பாயாக! எந்தப் புருடனானவன சாவ சொரூபியாய்ச சிவனையறிந்து இலிங்கத்தில பூசிக்கின்றனனோ, அவன செய்த பாவமனைத்தும மன்னிக்கப்படும், திருமாலானவர் தனக்குப் பிருகுமாமுனிவா சாபத்தால கிடைத்த பத்துப் பிறப்பும உலோகோபகாரமாம்படிசெய்து கொண்டது சிவலிங்கப் பூசையாலன்றோ? உனது நாயகனான முதல்வனுக்குண்டான பிரமகத்தி யொழிந்ததும் சிவபூசையாலன்றோ நீ கட்சியிலோர்ந்தனையே ஆதலினா நீயுமங்ஙன மனமொடு இனனே செய்யக்கடவை. அச்சிவலிங்கப்பூசை உத்தமதலங்களிலியற்றின், அது பலன கரதல மலகம்போற கிடைக்கும் இது திண்ணம், முக்காலமும திண்ணம அறிவாயாக' எனக்கூற, அஞ்சுதற்கிடங்கொடுக்கும அஞ்சனாதேவித் திருமகன், நாரதரை வணங்கிச சிவ பூசைக்குரிய அவ்வுத்தம தலம எதுவெனக்கேட்க, மகதிமுனி அகமகிழ்ந்து, ''சாவபக்தசன சதரு அரணம் செய்பவராகிய சிவபெருமானுக்குப் பிரியமான தலங்கள் இங்கிலவுலகத்தின் கண் அனந்தமுண்டு. அந்தத்தலங்கட்குள், மணமலர்ச்சோலை சூழ்ந்த திருவலிதாய க்ஷேத்திரத்



சுககிரீவன அனுமனைத தேடிககொணடு திருவலிதாய தலததுககுவநது தானும சிவதொண்டு செய

வானரச்சிரேட்டனை தலைவன் அநுமானேதனில்,— அடியேன் பூசையைக் கொண்டருளிய இந்தப் பரம லிங்கத்தைப் பணிந்து வணங்கப் பெற்றவர்கள் கடல் சூழ்ந்த உலகத்தில் உள்ள இலிங்கமெல்லாவற்றையும் வணங்கிய பலன் அடையும்படி கிருபை புரிந்தருள வேண்டும். நாமெடுத்த தீர்த்தத்தில் யாவரேனுஞ் செய்பவர்கள் எத்தகைய இழிகுலத்திற் பிறந்தவரே யாயினும், எத்தகைய பாவஞ் செய்தவரே யாயினும் அவர்கள் செய்த குற்றங்களை மன்னித்தருள வேண்டும் என்று வேண்டுதல் செய்ய, வேண்டுவார் வேண்டியதையே விரைந்து கொடுக்கும் கருணாநிதியாகிய கண்ணுதற்பெருமான் அவ்வனுமனுக்கு வரமளித்துங் கொடுத்தருளி உலகமாதாவாகிய அம்மையுடன் சோதி லிங்கத்தில் மறைந்தருளினார்.

- அனுமாரபராத மன்னிப்புச் சருக்க முற்றிற்று.

---

## சுக்கிரீவன் பூசித்த சருக்கம்.

சிவபூசா துரந்தரர்களே! அநுமானையா வலிதாயத்தினை நாடிச் சென்று அநேக நாளானமையினால், இராமச்சந்திரர் தனது சமீபத்திலிருந்துகொண்டிருக்கும் சுக்கிரீவனை நோக்கி, கிட்கிந்தையரசனே நமது அனுமன் நம்மைவிட்டுப் பிரிந்து வெகுநாளாகிவிட்டது. அவன் நமது பக்கத்திலில்லாதிருத்தல் சந்திரனில்லா வானம் போலிருக்கிறது. யோசித்துமுடிக்கவேண்டிய காரியங்கள் அநேகந் தடைப்பட்டிருக்கின்றன. நாமயோதிக்குச் செல்லவேண்டிய நாள் நெருங்கிவிட்டது, காலந்தாமதிருப்போமானால் பரதன் கதியேதாய்விடுமோ? முன்னதாக வனுப்பி நமது வரவைத் தெரிவிக்க அனுமனுமில்லை ஆகையால், நீயுடனே யதிவேகமாகச் சென்று வலிதாயத்தினையடைந்து அனுமனை யிட்டுக்

கொண்டுவரக் கடவாயென்றனர். சுக்கிரீவ மகாராஜன்,
சீதாரமணனை கட்டளையைச் சிரமேற்கொண்டு ஆகாய
மார்க்கமாகப் பாய்ந்து அதிசீக்கிரத்தில் வலிதாயத்
தினை யடைந்து சிவாலயத்துட்புகுந்து பிராக்கையில்
ஆஞ்சநேயர் தன்னை மறந்து உருத்திராட்சங் கரங்
கொண்டு பாதிரி மரத்தடியில் சிவலிங்கப்பெருமான்
சந்நிதிக்கருகில் கண்மூடிச்சிவமகா பஞ்சாட்சர ஜெபஞ்
செய்துக்கொண் டிருப்பதனைக் கண்டு, அவர் ஜெபத்
திற்கு இடையூறு செய்யாது வெளிவந்து பிராக்கையில்
அனேக முனிவர்கள் கூட்டங் கூட்டமாய்க் கூடிக்
கொண்டு சிலர் சிவபூஜையும், சிலர் வேதபாராயணமும்,
சிலர் ஆகமவாராய்ச்சியும், சிலர் புராணபடனமும், சிலர்
சாஸ்திர விசாரணையும், சிலர் யோகமுஞ் செய்து
கொண்டிருக்கும் செயலைக்கண்டு களிகூர்ந்து வியப்
புற்று ஆ! ஆ! நான் செய்த தவமேதவம். இத்தகைய
திவ்விய தலத்தினையும், இத்தகைய புண்ணிய மூர்த்தி
களையுந் தரிசிக்கப்பெற்றேனே. இக்காட்சியினைக் கண்
டபின் எவனித்தலத்தினை விட்டுப்பிரிவன். என்னைப்
போன்ற சாமானியனே பிரிய மனமெழாதிருப்பனேல்
நவவியாகரண பண்டிதராகிய நமது அஞ்சனை மைந்த
னாகிய அனுமாரோ இத்தலத்தினைவிட்டு நீங்குவார்
இவரை நாமெங்ஙனமழைப்பது, ஆயினுமாகுக, வந்
தது வரட்டும். இத்தலத்துப் புண்ணியமூர்த்திகட்குச்
சிலநாளைகளாயினுந் தொண்டுசெய்து வாழக்கடவேன்
எனத் தீர்மானித்துக்கொண்டு வலிதாயத்துள்ள சிவ
னடியார்கட்குச் சிவபூசையின் பொருட்டு வேண்டிய
திரவியங்களைத் தினந்தோறுங்கொணர்ந்து கொடுத்து
அப்பெரியோர்கள் ஆசீர்வாதமேற்று வாழ்ந்துகொண்
டிருந்தனன்.

சுக்கிரீவனை பூசித்த சருக்க முற்றிற்று.





இராமர் சந்தியாதனத்தை விட்டு அயோத்திக்குச் செல்லும்போது திருவல்லதாயனாதரைப் பூசித்து அனுமனையும் அழைத்துச் சென்றது.

# இராமர் தரிசித்த சருக்கம்.

சிவாக்கிரயோகிகளே! வான்மைந்தன் மைந்தனாகிய அனுமன் மூலவளா காதலி பணுளன் காதலித்த திருவலிதாயத்தில மிகக காதல்கொண்டு, அததலத்தில சிவபுராணஞ் சொலலுகினறவாகளையும, அவரை வியந்து கொண்டாடுகிறவாகளையும், சிவனடியாாகளை யெதிரகொண்டு சென்று அழைத்துவந்து அன்புடன் அமுதூட்டுகின்றவாகளையும, சிவ பெருமானைப் பூசிக்குஞ் செய்லையே மேறகொண்டிருககிறவாகளையும, சிவநாம முழக்கத்தினையுங் கண்டு சிவபெருமானுடைய பத்தரது பாததூளிததைக் கவசமாத தனனுடலிற்றுங்கி அத்தலததினை விடடுப் பிரிய மனமெழாது பல நாள் வாழ்நதுகொண்டிருக்கையில், கௌசலை மைநதனாகிய இராமா கநதமாதனத்தை விடடு அயோத்திக்குச செலலுமபோது, பிறவிததுனபஙகளைப் போக்கிப் பேரின்பவீடு கொடுததருளுஞ சிவபெருமான் ஆட்சியில் விளங்குந திருவலிதாயததினை யடைந்து, காமதகனனை கண்ணுதலைக கண்ணுரத் தரிசிதது அகண்ட சச்சிதானநத ஸ்ரீபூதனே சரணம, அவாங்கமனோகோசரனே சரணம். இலயபோக வதிகாரஸதனே சரணம ஈசானுதிரூப்த வாசசியுாாத்தனே சரணம் உமாமகேஸ்வரமங்கள விகரகனே சரணம, ஊாததாண்டவ மூர்த்தியே சரணம், எல்லாம வலல பரமசிவனே சரணம, எமபெருமானே சரணம, அப்பனே சரணம் சரணம, ஐயனே சரணம சரணம், அண்ணலே சரணம் சரணம், அரசே சரணம் சரணம எனப்பல திருநாமங்களை யெடுத்துச் சொல்லி, அருச்சனை புரிந்து பேரின்பம் வளாத்தொழுது பலதரம பஞ்சாங்க அஷ்டாங்கமாகப் பணிந்து, வந்தனை வழிபாடு புரிந்து சில நாள் அவ்விடம் வாசஞ்செய்து, வேதத்தில் விளையாடும் விமலனது சிவானுக்கிரகம் பெற்று, அனுமனுக்குப் பல

முகமன் கூறித் தன்னுடனழைத்துக்கொண்டு அயோ
திக்குச் சென்றனர்.

இராமர் தரிசித்த சருக்க முற்றிற்று.

---

## குசலவர் பூசித்த சருக்கம்.

சிவமுனீந்திரர்களே! சரயுநதியினாற் சூழப்பட்ட கோசல தேசத்திலே அயோத்திமா நகரமானது திருமகளுக்குத் திருமுக மண்டலம்போலவும், அத்திருமுகத்திலிட்ட திலகம்போலவும், அத்திருமுகத்திற்கு இன்றியமையாத கண்போலவும், அவளது மங்கள சூத்திரம்போலவும், மார்பிலசைகின்ற முத்துமாலைபோலவும், இதயஸ்தானம் போலவும், திருமகள் வாசம் பண்ணுகின்ற பொற்றாமரை மலர்போலவும் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அத்தகைய நகரத்திலே ஸ்ரீசானகி ரமணனை ஸ்ரீராமசந்திர மூர்த்தி அரசாட்சி செய்துகொண்டிருக்குங் காலத்தில் தான் இராவண சம்மாரத்தின் பொருட்டுத் தென்தேசத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்குங் காலத்தில் தான தரிசித்த சில ஸ்தலங்களின் மகிமைகளைப் பலமுறை தனது குடும்பத்தினர்கட்குச் சொல்லிச் சந்தோஷங்கொண்டாடிக் கொண்டிருக்கும் சமயத்தில் வலிதாயத்தின் மகிமையினைக்கேட்ட அவ்விராஜகுமாரர்களாகிய குசலவர் அத்தலத்தினைத் தரிசிக்கவேண்டுமென்று மாவல் கொண்டு தந்தையால் விடை பெற்றுக்கொண்டு வலிதாயத்தினையடைந்து பரத்துவாச தீர்த்தம் படிந்து, விபூதி உருத்திராட்சம் பூண்டு, சிவலிங்கப்பெருமானை



குசலவா திருவலிதாயத்தின் பெருமையினை, ஸ்ரீராமரால் கேள்விப்பட்டுத திருவலிதாயத்திற்கு வந்து சிவபெருமானைப் பூசித்து அனேக வரங்களைப் பெற்றது,



அகஸ்தியர் திருவலிதாயநாதரைத்துதித்து வில்வலன், வாதாவி, யிவர்கள் சேர்ந்த பிரமஹத்தி அணுகாமல் வரம்பெற்றுத் தன்பெயரால் தீர்த்தமெடுத்தது.

அனேகவாண்டுகள் பூசித்து அனேகமான வரங்களை யேற்று அயோத்திக்குச் சென்றனர் அதுமுதல் இத் தலத்துப் பெருமானுக்குக் குசலிங்கேஸ்வர னெனப் பெயருண்டாயிற்று.

குசலவர்பூசித்த சருக்க முற்றிற்று.

---

## கத்திய ரத்தி யொழிந்த சருக்கம்.

சிவஞானத் தபோதனர்களே ! கடலேழையு மொரு உழுந்தளவாகி யாசமனித்த முனிவேந்தனும் அகத்திய முனிவர், ஓர் காலத்தில் இமயமலையினின் றுந் தென்றிசை நோக்கிவந்து கொண்டிருக்கையில், மாயையின் மகளாம அசமுகியின் புத்திரர்களாகிய வில் வலன வாதாபி யென்னுங் கண்டகர்களிருவருங்கண்டு இம்முனிவரைக்கொல்லவேண்டு மென்றெண்ணி, இளை யோனாகிய வாதாபி யென்பவன் அஜவுருத்தாங்கி ஓர் காட்டில் மேய்ந்து கொண்டிருந்தனன். மூத்தோனாகிய வில்வலன் நெற்றியிற் றிருநீறும், காதினிற் குழையும் கண்டத்திற் கண்மணியும், கரத்திற் றண்டு கமண்டல மும், அரையிற் கல்லாடையுந் தாங்கி முனிவேடவுருக் கொண்டு குறுமுனிமுன் வந்து, மூன்று முறை பிரதட் சணஞ்செய்து அஞ்சலித்துச் சொல்லுவானாயினன். "ஏ முனியரசே ! தேவரீர் இவ்விட மெழுந்தருள அடி யே னென்ன புண்ணியஞ்செய்தனன். மேலும் அடி யேனைக் கிருதார்த்த னாக்கும் பொருட்டு ஏழையின் சிறுகுடிசைக் கெழுந்தருளிப் போஜனஞ் செய்து போதல் வேண்டும்" என்று அவரது திருப்பாதங்களில் தண்டாகாரமாகப் பணிந்து நின்றனன். தன்னிகரில்லா விந்தியமலையின் செருக்கையடக்கிய கும்பமுனி அவன்

வஞ்சகத்தை யறியாது சம்மதித்து அவன் பின் சென்றனர். உடனே வஞ்சகவேடம்பூண்ட தகாமுகத்தன் தனயனும வில்வலன நீராடிச சமையற்சாலையிற் புகுந்து சுத்தஞ்செய்து கோலமிட்டுச சுத்தமான வரிசியா லன்னஞ் சமைத்துப் பல பதார்த்தஙகளுடன் றகருருவங்கொண்ட தன றுணைவன வாதாவியை யறுத்துப் பக்குவமாகக்கறியாக்கித், தன் வேண்டுகோளுக்கிணைந்த முனிசிரேட்டரை யோராதனத்தி லெழுந்தருளச் செய்து உபசாரத்துடன் ஆபாசன மீடந்தந்து, அறுசுவையாகவமைத்த வூனனபானுதிகளுடன் அவ்வச மாமிசக்கறியினையுப படைக்க, ஐம்புலனவித்த அகத்தியராகிய சிவராசயோகா அனபுடனேயுண்டு பசிதீரநது எழுந்தருளி யிருந்தனா.

அதன்பின, சூராமுகன் மருகனும் தண்ண ளியற்ற வில்வலன் தெனறிசை நிறுவிய தென்றல் உலவும் பொதியமா மலைக்குப் பெருந்தகை யண்ணலாம அகத்திய ருயிரை வாஙகக் கருதி, தம்பீ! வாதாபீ! வா விரைவுட னென்றனன். கொலைத் தொழிலேயே தவமெனப்பூண் டவம்பெருக்கும் படுபாவியாகிய வாதாவி "அண்ணா! வந்தேன இதோ வந்தேன்" என்று, உளோபா முத்திரையின் கொழுநராம் அகத்தியருதரத்தினின்று ஆட்டுருவங்கொண்டு வெளிவர உத்தேசித்த மாத்திரத்தில், மூன்றுபோதும் முழுதுணா முனிவர் தெற்றெனத் தெரிந்து சிவசிவவென்று விண்பட்டுருவும் விந்தியமலையைத் தரைபடப் படுத்தியதன் றிருக்கரத்தால் வயிற்றினைத் தடவுதலும், வாதாவியவன் கோதாவி விட்டுச் சீரணமாயினன். தம்பி மடிந்த சங்கதியைத் தெரிந்து துருவாசமுனித் தோன்றலாகிய வில்வலன் தன்றொன்றேநதி முனிவர்தலையில் மோத வந்தனன். சிருஷ்டியாதி தொழில்களையு மியற்றவல்ல அகத்திய முனிபுங்கவர் தன்னெதிருற்றவொரு தருப்

பையினை யெடுத்துச் சிவாஸ்திரமாகப்பாவித்துப் பிர யோகஞ்செய்து வில்வலனைத் * தடிந்தனர்.

சிறிதுநேரத்திற்கெல்லாம வாதாபியும, வில்வலனு நீண்ட கரிய மேகமபோலு முருவங்கொண்டு, மிகக் கோபமுடையவராய் ஆரவாரத்துடன் அகத்தியர்முன் றோன்றினார், அதுகண்டு முனிவர், துருவாச முனி மக்களிவர்கள். இவர்களைக் கொன்றமையால் பிரம கத்தி நமமைச்சூழ்கின்ற தென்றறிந்து இதை யொழி த்துக்கொள்ளும் பொருட்டு, அவ்விடத்தில் ஒரு சிவ லிங்கப் பிரதிட்டைசெய்து பூசித்தவுடனே, தன் முன் வந்த சாயைகள் இமமென மறைந்துவிட்டன.

பின்னர், அவ்விடத்தினின் றுமெழுந்து சென்று சமீபத்திற் றவஞ் செய்துகொண்டிருந்த பரத்துவாச முனிவரைக் கண்டு அவருடன் அளவளாவித் திருவலி தாயநாதர் மகிமைகளைத் தெரிந்து தரிசித்து வணங் கிக் கண்ணீர் சொரிந்து ஆனந்தக்கூத்தாடிப்பாடி அழுது தொழுது நிற்க, சருவான மாக்களையு மீன்ற இளமுலைக்கன்னி கௌரிபாகனாகிய வலிதாயநாதர் காட்சிகொடுத்து, 'அன்ப! உன்னைப் பிடித்த பிரமகத் தியினி யுன்னை யணுகாது. சுகமாகப்பொதிய மலைக் குப் போகக்கடவை' என்றனர், அகத்தியர் மீண்டும் வணங்கி, "பெரும! வில்வனைக் கொனறவிடத்தில் தான் பிரதிட்டித்த சிவலிஙகப் பெருமானுக்கு அகத்தீஸ் வரர்' என்று வழங்கவேண்டும. நாமெடுத்த தீர்த்தத் தில் மங்களவாரம ஸ்நானஞ்செய்து அகத்தீஸ்வரரை வணங்குகின்றவர்கள் பிணிகளையெல்லாம" அழித்துச்

* வில்வலன் இறந்தவிடம்-வில்வலன் வாக்கம், இது-வில்லி வாக்கம் என வழங்குகிறது. இவ்விடத்திலேயே அகத்தியர் சிவ லிங்கப் பிரதிட்டை செய்தது. வில்வலனையும வாதாவியை யும் கொன்றவிடம் 'கொண்ணூர் என வழங்குகிறது. இவ்வூரில் வலிதாய நாதனைப் பூசித்த கேசவப்பெருமாளென்று வழங்கு கிறதாமோ தரப்பெருமா ளாலயமுண்டு.

சிவஞானச் செல்வமளித்து ஆதரித்தருளவேண்டும்'' என்றனர், பெருங்கருணை வள்ளலாகிய பரமசிவம் அவ்வரங்களைக் கொடுத்து, பாசிவையுடன் சிவலிங்கத்திற் கரந்தருளினர்.

அகத்திய ரத்தியொழிந்த சருக்க முற்றிற்று



## பிரமன் முத்தியடைந்த சருக்கம்.

சிவபக்த சிரோமணிகளே! சத்திய லோகத்திலே வாணிசம்மேதனாய் நவரத்தின மயமான ஓர் சிங்காதனத்தின் மீது நான்முகக்கடவுளெழுந்தருளி யிருந்து ஒருநாள் தனக்குள்தானே சிந்திப்பாராயினர். "நான் ஆண்டுகொண்டிருக்கும் இந்தச் சத்தியலோகம் உண்டாகி யழிந்ததற்குக் கணக்குமுண்டோ? அவ்வப்போது அவ்வுலகத்தினை யாண்ட பிரமர்களுக்குத் தாம் கணக்கேது? அவர்களில் நானுமொருவன்றானே? என்றைக்காயினு நானும் இறந்துபோக வேண்டியது நிச்சயமென் றேற்படுகின்றது. ஐயோ! இத்தகைய அனித்திய தேகத்தை நிலையென நம்பி விஷயா நந்தத்தில் மூழ்கி வீணாகக் கெட்டேன்! மோசம் போய் விட்டேன! முக்கியமாகத் தேடிக்கொள்வதில் ஆசைப்பட்டேனில்லை. எத்தனையோ காலம் விருதாவாகக் கழிந்துவிட்டது! அநந்தகாலங்களா னடைந்தபய னென்றுங் காணேன். சீ, சீ! இதென்னவாழ்வு இனியேனும் சாக்கிரதையாக விராவிட்டால் மோசமாக முடியும் அந்தோ மாயையின் சாலமோ சாலம்! மாயையின் சாலமோ சாலம்!! மாயையின் சொரூபத்தைச் சிறிதேனுஞ் சிந்தித்து நோக்காது அம்மாயையிலே மயங்கி யுழன்றேன்! அம்மமம! மாயாபோகம் எவ்வளவு ஆனந்தத்தை விளைத்துவந்தது! இவைகளையெல்லாம் உண்மையென்றல்லவோ நம்பியிருந்தேன் மாயை



பிரமன் திருவலிதாயமடைந்து தன் பெயரால் ஓர் தீர்த்தமுண்டாக்கி, பஞ்சாக்கினி மத்தியினின் தபஞ்செய்து பிறவாத வரம்பெற்றது.

யெனக்கு அஞ்ஞானியமென்றறிந்தும், அம்மாயையை நீங்கி யிருக்கமுடியவில்லையே. அல்லது மாயையாகவே நானிருக்கின்றேனோ வெனில், மாயை யொன்றுண் டென்று அதன் காரியங்களினால் வேறாக விளங்குகின் றேனே ஆ, ஆ! இந்த மாயை செய்வது இந்திரசால மேயாம்! இதினின்று மீண்டாலல்லவோ உய்தியுண் டாம். இம்மாயையினைக் கடப்ப தெவ்வணம்? மாயை கொடிது! கொடிது! மாயை யொழிந்தாலல்லது பிறவியொழியாதே. மாயையாலன்றோ தேகம் இடி கரையே யிடிந்து விழுந்து கரைந்து போகின்றது! அங்ஙனம் போவதற்கு முந்தியே யன்றோ நித்தியமான வொன்றைத் தேடிக்கொள்ள வேண்டும்! இம்மாயை யினை நானே யொழித்துக் கொள்வதற்குச் சிறிதுங் கூடாதே! பிறரைக்கொண் டொழித்துக்கொள்ளலா மெனில், யாவரும் மாயா சகிதர்களாகவே காணப்படு கிறார்கள். அவர்களை நாடுவது குருடனைக் குருடனைத் தேடுவது போலப் புடம் மாயா ரகிதனாயிருக்கிற வொரு வனை யடுக்கவேண்டும். யிது நீங்காது, நீங்காது. அங் ஙன மிருப்பவன் யாவன்? ஓ! ஓ! அவன் பிறப்பிறப் பில்லாதவனாக வன்றோ விருக்கவேண்டும். அவ்வண்ணம் விளங்குபவன் யாவன்? அவன் சாவமுக்ய ஹவிர் திரவியங்களுக்கும் போகதாவாகி தகராகாசமத்யகத் ஞானவினிது பிரகாசிக்கும் பரசிவப்பிரபு ஒருவரேயாம். இது சத்தியம், சத்தியம், சத்தியம். அப்பரமனை திரு வடியினையே சரணமென்றடைந்து உய்வதுதான மேலான நலம். அந்தோ! இதுகாறு நினையாது கெட்டேன்! கெட்டேன்!" என்று திடீரெனச் சிங்காதனத்தினின் றுங் கீழே குதித்துச் சத்திய லோகத்தைத்தணந்து, ஊழிதோறுங் கயிலாயகிரி யடைந்து, அவ்விடத் தில், பிருங்கி முதலிய பதினெண் கணங்களும் பண் பொடு சூழக் கண்ணுதற்பெருமான் கருணையோ டிலங்கும் ககனந்தொட்ட கனக வாலயமும், அவ்வால

யத்தின் றிருவாயலிலே யிணி தமருந் தண்டுழாயலங் கலாதிப் பலவகை மணமருவித்தார் எண்டிசை மணக்கு மெழிலுடை வேத்திர நற்படையினையை நலம பெறத் தாங்கிய சிலாதரமுனி நயந்தளித்ததோா மைவாஞ் சிவம பெறவநத திருநநதி தேவும் இருக்கக்கண்டு பிரமன், அநநநதியெமபெருமான் றிருவடிகளை வணங்கி விடைபெற்றுத் திருக்கோயிலுள்ளே சென்றான். அவ் விடத்தில், நாரணன் முதலிய தேவாகள் நலம பெறத் துதிக்கவும, கணநாதாகள் கவரி விரட்டவும, கிம்புருஷ காநதருவ ராதிகள் கீதங்கள் பாடவும், அட்ட வித்தி யேசுரா, அட்டமங்கலந் தாங்கவும, முனிவ ரனேகர் அர அர சிவ சிவ வென்றடி போற்றவும, அரமபை யுருதியா ஆடிப்பாடவும சிவயோகிகள் சிவானநத மேவ வும், திருவருண் மழை பொழியவும் பசிளங் கொடி யாகிய பாாவதி தேவியாருடன் எழுநதருளி யிருக்கும் செம்பளவபோற் சிவநது விளஙகும சடாமுடியை யுடைய சநதிரசேகரனைத தன்னிரு நான்கு கண்களுங் களிப்பக்கண்டு, அஷடாங்க பஞசாங்கமாகப் பணிநது வந்தனை வழிபாடியற்றி, "ஈரிரு முனிவா இனபோடு தேற இருமம பெருஞானம இசைவுடன சொன்ன வித் தகமுதல்வ! வினையேன பரிபவமிங்கு கூறுவன கேண்மோ" வெனக கைகூப்பி அதி விநயத்துடன் சொல்லுவானாயினன் வாணிகேள்வன்.

"தவள நீறணிந்த தண்ணளியுடையோய்! துன் பத்திற்கேதுவாகிய வெனது சிருட்டித் தொழிலில் அடியேனுக்கு அணுவளவாயினு மாசையில்லை. விட் டுணு வாதி யேனையோாகள் வியன்பதவியிலும விருப்ப மில்லை. தத்துவநிலை யுணாநது சதானந்த முத்தியடை வதற்கே முழு ஆவலுடையவனா யிருக்கின்றேன்" என்று கதறிப் பதறி யழுதனன். அவன் பக்குவத் தினைப் பார்த்துக் கைலாயபதி, "கேளாய் பிரமனே! நீ கொண்ட வெண்ண மிக வுத்தமமானதே. அம்

முத்தி நிலைக்குத் தவநிலையே சாதனமாம்; அத்தவநிலை சிவதலங்களிற் செய்யின் சீக்கிரம் பலனுண்டாம்; போகபோக்கியங்களைக் கொடுக்குந தானத்தாலும் தருமத்தாலும் கிடைப்பதன்று ஆதலின், கடல் சூழ்ந்த வுலகத்திற் சத்தபுரங்களி லொன்றான காஞ்சிமா புரத்திற்கு வடகிழக்கில், விரத க்ஷீரநதி தீரத்திலுள்ள வலிதாயத்தை யடைந்து, தவமுஞற்றி வருவாயாயின் உனனிஷ்டஞ் சித்தியாகும" எனத் திருவாய் மலர்ந் தருளினர்.

பின், நாரணனுந்திவந்தோனுகிய நளின மலர் வாசியாம பிதாமகன பெம்மானிடத்தில் விடைபெற்றுக் குடிலையின் வடிவினை நிகரெனக்காட்டுங் கொன்றைமாமலா மணம எங்கணும் வீசும விண்டொடுமதில் சூழ் வலிதாயமடைந்து, அவனுறும ஆலயத்திற்கு மேற்றிசையினகண் தனபெயராலோா தீர்த்த முண்டாக்கி; நீராடித் தேனறுளிக்கும் நிழலில் வீற்றிருந் தருளும வலிதாய நாதரை அனபு மிகுந்த அருச்சனை செய்து, அருந்தவஞ் செய்யச் சங்கற்பித்துப் பவரோகநிர்மூல வருமருந்தாகிய திருநீறு பூசி உருத்திராட்ச மாலைதரித்து, சந்திரசேகரப் பெருமானுக்குரிய சத வுருத்திர மந்திரத்தைச் செபித்துக் கனிபட்சணம், சருகுபட்சணம, சலபட்சணம, வாயுபட்சணஞ் செய்பவனுகி மோட்ச விதாயகமாகிய பஞ்சாட்சரத்தினைக் கணித்து இதயார விந்தத்தினடுவிலே அம்மையப்பனை யமாந்தருள வைத்துப் பஞ்சாக்கினி மத்தியினின்று அகோரமான அருந்தவமுஞற்றுவானாயினன்.

இவ்வாறு நெடுங்காலங் கமலவேந்தன் கடுந்தவஞ் செய்து கொண்டிருக்கையில, திரிநேத்ர தாரியாகிய சிவபெருமான் இலிங்கத்தினின்று மாவிர்ப்பவித்துக் காட்சிகொடுத்தருளினர். நான்முகன்றன் ஞன்கிரு கண்களுஞ் நலம்பெறத் தரிசித்து, அருட்பெருங்கடலே,

அமுதசாகரமே அடியேனை யாண்டருளும், அனுதி மலமுத்தனே! ஆணவத்தா லழிந்தேன, மாயாரகிதனே! மயையால் மயங்கினேன், காமனை யெரித்தோய் காமத்தாற் கலங்கினேன, சிவனே! சிவனே! இனி யுன் பாதமே கதி, இனி யெக்காலததும பிறவாத வரமும், இந்தத்தீரததம பிரம தீரததமெனவும, இததலம் பிரமபுரி யெனவும வழஙகி வரவும கிருபை செய்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க அருட்பெரும் வள்ளலா மரவினரு சுண்டோன, அவ்வரங்களுடன் அயனுக்குச சிவகணங்களுககுத தலைவனுகு முயாபதவியையுங கொடுததருளிச சோதி லிங்கத்தற் கரந் தருளினுா.

பிரமன முத்தியடைநத சருககமுற்றிற்று.

---

## வாயுதேவன் பூசித்த சருக்கம்.

சைவதபோதனாகளே! முனனெருகாலத்தில் ஆதிசேடனும வாயுவும தஙகள் தஙகள பராக்கிரமத்தினை மிகவியநது பேசிககொணடு அதனுண்மையை வெளிப்படுத்த வெண்ணி வாயுபகவான நெடுநேர மாலோசிததது ஆதிசேடனுடைய அகங்காரத்தினை யடக்கியாளும வலியினைப்பெறுவதறகு உனனி வலிதாயத் தலததினையடைநது கருணுநிதியாகிய கண்ணுதற் பெருமானைப பூசித்துக் கயிலை நாயகன சருணைபெறறு அதிக வலியடைநது வடாதுதிசைசெனறு ஆதிசேடனைக்காண இருவரும மேருமலைக்குச் சமீபததில் சேர்நதனா. ஆதிசேடன் தனது ஆயிரம படங்களால் மேருவின் ஆயிரமுடிகளையும மூடிக்கொள்ள வாயுவு அவ்வாதிசேடன முடிகளைக்கிளப்பும 'பொருட்டு மோதியடிக்கவாரம்பித்தனன். ஊழிகாலத்துக் காற்றினைப்போலச் சண்டப் பிரசண்டமாய் வீசுகையில் இம



வாயுதேவன் திருவலிதாயநாதரைப் பூசித்துப் பாபத்தைப் போக்கிக்கொண்டது.

யம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதன முதலிய மலைகள் அசைந்தன, கங்கை, யமுனை சரச்சுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி, சிந்து, தாமிரபருணி துங்கபத்திரி, கிட்டினி முதலியநதிகள கொப்புளித்தன, உவர்நீர, நன்னீர, தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் முதலிய கடல்கள் கொதித்தன, ஐராவதம, புண்டரீகம, வாமனம், குமுதம், அஞ்சனம, புட்பதந்தம, சாருவபூமம், சுப்பிரதீபம முதலியயானைகள் வீறிட்டன. இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், குபேரன், ஈசானன் முதலியோா பயந்தனா. சூரியன, சந்திரன் வழிதடுமாறினா. நட்சத்திரங்கள் உதிர்ந்தன. முனிவாகள் பயந்தனா. அண்டபகிரண்டங்களின் அடுக்குகள் குலைந்தன. பூமியிலொரு காரியமு நிகழ்வதற கேதுவில்லாமற போயிறறு. இத்தகைய விபரீத விளைவினையறிந்த தேவாகள வாயுவினையடுத்துத தாஞ்செயலினைக் குறைக்குமபடி தங்களாலியன்ற வரையில் கெஞ்சிக் கேட்டுக்கொண்டு மிசையாதுநிறக, ஆதிசேடனை யடுத்து ஐய! உலகஙகளெல்லாம இன்னஞ்சிறிது நேரத்தில அழிந்து விடுமபோலிருக்கின்றது. உங்களிருவா சண்டையில உயிாகள அனேகமாயிரமடிகின்றனவே இது தருமமாகுமோ, வாயுவோ எங்கள் வேண்டுகோளுக்குச் சிறிது மிசையாமல் முரட்டுத்தன்மை வாய்ந்திருக்கின்றான். நீ யாகிலுந் தயை செய்து உலகோபகாரமாக உன் ஆயிரம் படங்களிலொன்றை யாகிலும சிறிது எடுக்கவேண்டுமென்று வேண்ட, ஆதிசேட மனமிரங்கி யொரு படத்தினைச் சிறிது தளாத்தினன், உடனே அப்படத்தின கீழேயிருந்த மேருமுடியி லொன்றினைப் பெயர்த்து வாயுபகவான் வீசி யெறிந்தனன். இதனால் வாயு தான் செயித்து விட்டதாக விறுமாப்பண்டைந்து செல்லுகையில் நாரதமுனிவர்கண்டு வாயுவே நீ என்ன காரியஞ்

செய்தனை, நீ யுலகத்திற்கு அனேகமான விடையூறு விளைத்தனை. பல முனிவர்கள் தங்கள் தவங்களை விட்டனர். அனேக வுயிர்கள் மாண்டன, இவற்ருல் பெரும்பாவத்தினை யேற்றுக்கொண்டாய் இங்ஙனம் செய்தல தகுதியாமோ வென்றனா. வாயு திகிலடைந்து ஐய! இத்தகைய விபரீதம விளையுமென் றெண்ணுது செய்துவிட்டனன். இனியான் என்செய்வது, என் பாவத்தினைப போக்கடிக்கத தேவரீரே பரிகாரம் சொல்லவேண்டுமென று இரங்கிக் கேட்டுக்கொண்டனன். நாரதா வாயுவை நோக்கி, மாருதமே! சாவ மங்களகரனை நமது சிவபெருமான மிக விரும்பத் தக்க வலிதாய தலத்தினை யடைநது பூசிப்பையேல் சுத்தனுவாயென்று கூறியேகினா். உடனே வாயு வலிதாயததிற்குச சென்று பரத்துவாச தீாத்தத்திற் படிநது விபூதியுருத்திராடசமணிநது பஞசாட்சரத்தியானத்துடன் வலிதாய நாதனைப்பூசித்து வருகையில் சுவாமி வெளிவந்து வாயுவே! நினது பாவ மனைத்தும் நீங்கியது இனி நீ சுகமாக வாழக்கடவாயென்று வரமருளி மறைந்தனர். வாயுவும ஆனந்தங் கொண்டு சில நாள் அத்தலத்திலேயே வசித்திருநது தனது உலகம் போய்ச் சேர்நதனன்.

வாயுதேவன் பூசித்த சருகக முற்றிற்று.



## மன்மதன் இந்திரன் பூசித்த சருக்கம்.

தவளநீறணிந்த தண்ணளியுடையோரே! சகல தேவாதி தேவனுகிய சிவபெருமானை நிநதித்துத் தக்கனடத்திய வேள்வியினைச் சார்ந்த தேவர்கள் துன்பு மனுபவிக்கும் பொருட்டுச் சூரபத்மன் பிறந்து நூற்றெட்டு யுகமாகத் தேவர்களை வருத்துகைல்யி அத்



மன்மதன், இந்திரன் இவர்கள் திருவலிதாயமடைந்து, வலிதாயநாதரைப் பூசித்துத் தாங்கள் செய்த
..த்தைப் போக்கிக் ..ண்டது.

துன்பத்தினைச் சகியாதவர்களாகித் தேவர்களிற் சிலர் பிரமாவினை யடைந்து மலரடி பணிந்து எங்கள் துன்பத்தினை நீக்கி யருளவேண்டுமெனப் பலபலவாகத் தோத்தரித்து நின்றவருள் இந்திரன் மொழிகுவான. நான்முகக்கடவுளே! அதிவீர பராக்கிரம சாலியாகிய சூரனால் எங்கள் வலியாவுஞ் சிந்தினம் அனேகமான வேலைகள் செய்து இளைத்தனம. சூரனுககுச சமையற் செய்பவன் அககினி, சலங் கொணாபவன வருணன், வீடு சுத்தஞ்செய்பவன் வாயு, தீபமேறறுபவன சநதிரன், பஞ்சாஙகஞ சொல்பவன் தேவகுரு, அவுணர் ஆஙகாங்குச செல்லுநதோறும் பினனா சென்று நாக்கானது வறண்டு உளந்தடுமாறிப் பினனுற் செல்லும் சேவகனுன், சமுத்திரததினின்று மீனகளைப் பிடித்துச் சுமநது கொண்டு வருபவா மற்றைய தேவாகள் இத்தகைய விழிவான தொழில்களைச் செய்து பிழைக்கின்றோம நாங்களுஞ ஜீவிக்குமபடி கிருபைசெய்தருள வேண்டுமெனக் கண்ணீா சொரிய நினறனா. இரணிய கருப்பன் இந்திரனை நோககி ஐய! என் செய்வது பூர்வத்தில நமது ஆண்டவனுகிய சிவபெருமானை விரோதித்த மகாபாவியாகிய தக்கனென்பவனுடன் சினேகித்திருந்ததனல் இத்தகைய துன்பங்களை யனுபவிக்கும்படி நேரிட்டிருககிறது. நமது சிவபெருமான் திருவருள் கிடைத்தாலன்றி யித்துன்பநீங்காது. தேவேந்திரனே! நானொரு சூழ்சசி சொல்லுகிறேன். கேட்பாயாக உலகமாதாவாகிய பாாவதியார் மேருசாரலில் தவஞ்செய்து கொண்டிருக்கிறுா. மகாதேவர் கைலையின் கண்ணே யோகத்தில் வீற்றிருக்கிறுர். மூவர்க்கு முதல்வனுகிய மூர்த்தி உமையாளை மணந்து சிவசுப்பிரமணியக்கடவுளைத் தருவரேல் அவர் சூரனைக் கொன்று தேவர்களிடுக்கணை யொழித்தருளுவர். தேவாதி தேவனுகிய பெருமான் யோகத்தினின்று நீங்கவேதாவது தக்கமுயற்சி செய்யக்கடவாயென்ற

னர், கேட்ட வாசவன் மகிழ்ந்து இதறகேற்றவன் மன்மதனே யென்று தீர்மானித்து அவனை யழைப்பித்து மாரனே, ஈரஞ் சற்றேனு மிலலாத சருகுகளையுண்டு இனியயோகஞ் செய்துகொண்டிருக்கும் வீரமிகுந்த முனிவர்களுடைய பெருமை பொருந்திய மனதிலுள்ள தவவலிமை கெட அகற்றி அம்முனிவர்கள் அழகிய மாதர்களோடு சோப்பிக்கும் மாடசிமையுடையவனே! கேட்பாயாக நதியானது இளமையான கன்றுக்குட்டி அலறும்படித் தாய்ப்பசுவை யடித்துகொண்டு போகும்போது அதனைத் தடுக்காமல கரையிலிருந்து வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருக்கிற யாவர்க்கும் பாவமுண்டாகாது. அவ்வெள்ளத்திற சென்று அதனைத்தடுத்து மீட்டுக்கொண்டுவரும சத்தியினை வாய்ந்தும அங்ஙனஞ் செய்யாது கரையிலே சும்மாவிருப்பார்களையாயின அவர்களையே பாவமடையும். அதுபோல, வெளுத்துத் திரண்டு பரந்து குளிர்ச்சிபொருந்திய முத்துமாலைகளைத் தரித்து இளைத்துக் குவிந்த தனங்களையுடைய மாதர்களையும், திரண்ட தோள்களையுமுடைய புருடர்களையும ஒன்றாய்ச சோப்பித்து அவர்களுக்குக் கலவியினை விளைவிக்கும வலைமை உனனிடத்தி லிருப்பதால கரும்பு விலலினையுடைய காமனே! நீ தறகாலம தேவர்களுக்குணடான இடுக்கணொழியுமபடி, வெள்ளிமலையில் வீற்றிருக்கும விமலனரை யோக்ததி னின்று நீக்கி வியலையினை விவாகஞ் செய்து கொளளுமபடி செய்யக்கடவாய் அங்ஙனஞ் செய்யாயேல் உனனையே துன்பமடையு மெனறனர்.

அங்ஙனமே செய்து முடிப்பதாக விரைந்து இந்திரனிடத்து விடைபெறறுக் கயிலைக்குச் சென்று பஞ்சபாணங்களை வில்லிடையேற்றிக் கண்ணுதற் கடவுளின்மீது பிரயோகித்து விட்டனன். காமவாளியானது சந்திரசடாதரனாகிய சாம்பசிவன் திருமேனியில் தாக்கியபோது தாமரைப்புட்பத்திற்கு முன்னே

மற்றக் குளிர்ச்சி பொருந்திய புட்பங்கள் போலாயின. யாதொரு விகாரத்தினையுஞ் செய்யாது அவ்வம்புகள் அழிந்து விட்டனவேயாயினும் அகாரவாச்சியமாகிய அமலனை அதிகக் கருவத்துடன் வெல்லும்படி நெருங்கியதால் அம்மன்மதனைத் தமது நெற்றிக்கண்ணினால் பார்த்தனர், அண்டகோடிகளை யெல்லாம் அரைக்கணத்தி லழிக்கத்தக்க நெற்றிக்கண்ணிற்கு முன்னம் நிற்பவர் யார்? கொழுந்து விட்டு எழுகின்ற அக்கினியின்மேல் விழுந்த, ஈயைப்போல காமவேந்தன் வெந்து சாம்பலாயினன். இதனை யறிந்த இரதியானவள் ஐயகோ! ஐயகோ!! என்றலறிக் கீழே விழுந்தனள், பெருமூச்சுவிட்டனள், ஒடுங்கிச் சோர்ந்தனள். முலைகள் சிவக்கும்படி அடித்துக்கொண்டனள், வயிறு வீங்கும்படி அழுதனள், கைகளை நெரித்துக்கொண்டனள் கூந்தலும், கரங்களும் கண்ணீரும் பூமியில் தழுவ முகமவாடித் தவித்திட்டு என்றனுருயிரே! என் கண்மணியே! என் கோருந்துணையே! எங்ஙனம் பிழைப்பேன். இந்திரனுக்குக் காமத்தினை மூட்டி ஆயிரங் கண்ணனாகச் செய்தாய், பிரமனுக்குக் காமத்தினை மூட்டி அவன் பெண்ணின்மீது இச்சை வரச் செய்தாய், விண்டுவினுக்குக் காமத்தினை மூட்டிச் சுடுகாட்டி லலையச்செய்தாய் இத்தகைய நினது செயல் சிவபெருமானிடத்திற் செல்லுமா? தேவர்கள் உனையேவிட்டு இப்போது தூரத்தே நிற்கின்றார்களே இப்போது நான் துக்கப்படுகின்றேனே? அவர்கள் மனைவிமார் அழுகின்றார்களா எனப்புலம்புகையில், தேவர்கள் பார்த்து வருந்தித் தங்கள் நாதனாகிய சாம்பமூர்த்தியின் திருவடிகளை மனத்தினில் தியானித்துத் துதிசெய்தார்கள், சுவாமி யோகநீங்கித் தமது திருவுளத்தில் நந்திதேவரை நினைத்தருளினார், நினைத்த மாத்திரத்தில் நந்தியெம்பெருமான் அறிந்து சென்று அவர் தம்பாதங்களைத் தொழுது நிற்க, நீ பிரமன் முத



அக்கினி தானசெயத அடாத காரியததிறகு திருவலிதாயமடைநது கடவுளைப் பூசித்துத் தன் குற்றத்தை மன்னித்துககொணடு தனது நகரையடைநதது.

தினை நீக்கிக்கொண்டு பேறுபெற்றதும், அமலமுனிவராகிய அகத்தியர் அனுக்கிரகம்பெற்றதுமாகிய வலிதாயத்தினை அடைக்கலமாக அடைவோமென இருவருஞ் சேர்ந்து தெற்கு நோக்கி வந்தடைந்து பாரத்துவாச தீர்த்தத்திற் படிந்து விபூதி உருத்திராக்கந் தரித்து வலிதாயநாதனைப் பூசித்து வருகையில், ஒருநாள் பொன்னகர்க்கிறைவனே, பூமகள் பதனே, நீங்களிருவரும் என்பால் செய்த தீமையாலுண்டாகிய பாவமானது உங்களைவிட்டு விலகும்படி கருணை செய்தோம். இனி நீங்கள் சுகமே உம்முலகஞ் சேர்ந்து போகக்கடவீர்களென, அசரீரி ஆகாயத்திலுண்டாகியது கேட்ட இருவர்களும் ஆனந்தித்து கூத்தாடிக் கொண்டாடிப் பெரும் பூரிப்புடன் தங்களிருப்பிடம் போய்ச்சேர்ந்து வாழ்ந்தனர், அக்காலமுதல் யானையும் இளைஞாயிறென வொருபெயர் வலிதாயநாதனுக்கு வழங்கலாயிற்று.

மன்மதன் இந்திரன் பூசித்த சருக்கம் முற்றிற்று.

---

## அக்கினி பூசித்த சருக்கம்

சிவவேடப்பொலிவுடையீர்! அக்கினிதேவனொருகாலத்தில் எங்குஞ் சஞ்சரித்து உலாவி வருகையில் தெற்குத்திசையினை யடைந்து எமலோகத்திற்சென்று அவன் வீட்டிற் பிரவேசிக்க அவ்வியமன் மனைவி சாமளை தனியாயிருப்பதைக் கண்டு நெருங்கி அவள் வாய்ந்த கயல்போன்ற விழியினையும், வில்போன்ற புருவத்தினையும் மூன்றாம்பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றியினையும், மேகம்போன்ற கூந்தலினையும், கண்ணாடி போன்ற கபோலத்தினையும், முத்து போன்ற பற்களையும், கோவைப்பழம்போன்ற உதட்டினையும்,

குமிழம்பூபோன்ற மூக்கினையும், வள்ளைப்பூபோன்ற காதினையும், கமுகுபோன்ற கழுத்தினையும், வேய்போன்ற தோளினையும், தங்கக்கலசம்போன்ற தனங்களையும், ஆலிலைபோன்ற வயற்றினையும நீர்ச்சுழிபோன்ற உந்தியினையும், உண்டோ இல்லையோ வெனச் சந்தேகிக்கும்படியான இடையினையும், ஆலவட்டம்போன்ற அல்குலினையும, வரால் மீனையொத்த கணைக்கால்களையும, ஞண்டையொத்தபரடினையும, செம்பஞ்சியூட்டிய அடியினையும் கண்டுமயங்கி மோகாந்தகாரனாகி மூர்ச்சிதனாகி தெளிந்து சாமளையை நோக்கிச் சொல்லுவானாயினன். பெண்கள் நாயகமே! நான் நினது நாயகனைக் காணவந்தவிடத்தில் நினைத்தனியேகண்டு நினைமுகால் அறிவுகலங்கி அவதிப்படுகிறேன். சிறிதுகாலதாமதித்தால் உயிரிழப்பேன, உடனே என்னை ஆலிங்கனஞ் செய்து எனது அவாவினை நீக்கியாட்கொள்ளுவாய, சிறிதும் ஆலோசிப்பதில் பிரயோசனமில்லை. ஆபத்துக காலத்தில் ஆட்கொள்ளுவதே அறிவுடையோர்க்கழகு எனமீது சிறிதுங்குற்றமில்லை. இவ்வளவிற்குங்காரணம உன்னுடைய சௌந்தரியமே ஆகையால் நீ தடைசெயயபபடாது என்றனன். சாமளை அக்கினிபகவானை நோக்கி ஐய! இஃதென்ன விபரீதம! உன்னைப்போன்ற தேவர் இங்ஙனமாய் கூறுவது அழகாமா? மறையவர்தேவர்கள் கேட்டால் என்னையாரா? நான ஒருவருடைய மனைவியல்லவா? எனது நாயகன உனக்குச் சிநேகிதனல்லவா? காமத்திற்குக் கண்ணில்லை யெனனும பழமொழிக்கிணங்க இவ்வாறு முன்பின் ஆலோசியாது பேசுகிறீர - சற்று நிதானித்துத் தருமம் மின்னதென்பதை யோசித்துப் பாரும்! நானோ தங்கட்குச் சொல்வது? அக்கினிபகவானே, நமஸ்காரம் போய்வாருமென்றனள். இவ்வார்த்தைகளைக்கேட்ட அக்கினி சொல்லுவானாயினன். பெண்

முதலிய கரிகரலீலைகளுங்கண்டு ஆனந்தங்கொண்டனர்.

பின்னர் சாமளை அக்கினி தேவனைநோக்கி, என்னருமைச் சினேகனே! உன்விருப்பத்தின்படி காரிய நிறைவேறியது. எனது நாயகனவரும வேளையாயிற்று, சீக்கிரமிவ்விடத்தினைவிட்டு நீங்கிவிடுவாய், மறவொரு காலத்தில் உனக்கிஷ்டமானபோது வந்திருந்து சுகித்துப்போகலாமென்றனள். அக்கினிபகவான சாமளையைப் பார்த்து, அடியென கண்மணியே! ஆசை நாயகியே! ஒருக்கணமும் முனைப்பிரியேன, பிரிந்தா லுயிர் தரியேன், எமன வந்தாலுமசரி, நமன்வந்தாலுமசரி, எனக்கவசியமில்லை யென்றனன், உடனே இயமன நிலை வாயலில வந்தனன. சாமளை அக்கினியை விழுங்கி விட்டனள். அதுமுதல் சாமளை இரவில இயமனுடன கூடியிருப்பள், பகலில அக்கினியையுமிழ்ந்து அவனுடன கூடியிருப்பள். இவ்வாறு சிலகாலஞ்செல்ல, உலகத்தில் அக்கினியிலலாமல் பிராமணாகள் தேவாகள் முதலியோா வருந்தித தியானித்துச சங்கதிதெரிந்து கொண்டு வாயுபகவானை யழைத்து உனது தோழனை அக்கினிபகவான் எங்கேபோனானென்று கேட்டாாகள், அதற்கவன் அவன் போனவிடம எனக்குத் தெரியாதென்றன. பின்னா தேவாகள் எப்படியாவது நீயவனையழைப்பித்துக கொடுக்கவேண்டுமென்று கூறுதலும், வாயுபகவான எல்லாதேவாகட்கும தனவீட்டில் போசனஞ் சொன்னான. இயமனுக்கும் அவன் மனைவிக்கு முன்னே மூன்றிலையிட்டான். அதற்கு இயமன் எங்கள் முன மூன்றிலை ஏன் போட்டாயென்றனன். வாயுபகவான இயமனைப் பார்த்துச சினேகனே! உனக்கொன்றும், உன்மனைவிக்கொன்றும், உன்மனைவிவயிற்றிலுள்ள அக்கினி பகவானுக் கொன்

அமுதமுமிருக்கிறது. நான் வேண்டுமா? அமுதம் வேண்டுமா சொல்லென்றனர். அப்போது தேவர்கள் அமுதமே வேண்டுமென்றனர். அசுரர்கள் நீயே வேண்டுமென்றனர். இமையவர்கள் அமுதம் பெற்றனர். தைத்தியர்கள் மோகினியை யழைத்துக் கொண்டு ஓரிடத்திற் போயினர். நாரணர் அவர்களை நோக்கி, நிசாசரர்களே! உங்கட்குள் யார் என்னையணைபவரென்றனர். அதைக்கேட்ட அவர்கள் ஒவ்வொருவரும் அம்மோகினியைக் கூட வேண்டுமென்னுமாசையால் தங்கட்குள்ளே போர்செய்து ஒருவரையொருவர் கொலை செய்துகொண்டு மாய்வுறுபடுந்தனர். அவ்வசுரர் கூட்டத்திலிருவர் இது விஷ்ணுவின் மாயை யென்றறிந்து தமதுருவநீங்கித் தேவர்கள் போலுருக் கொண்டு அத்தேவர் கூட்டத்திற் புகுந்து வாழ்ந்தனர். மோகினியாகவந்தமாயன் தானவரெல்லோரு மிறந்தாரென்று மீண்டு தேவரையடைந்து அவர்கட்குப் பந்தியி லிருந்து அமுதத்தினைத் தேவர்கட்குப் பங்கிட்டுக் கொடுக்கையில் தேவருள் பந்தியிலிருந்த வசுரரிருவர் மந்திரஞ்சொல்லாமலே அமுதத்தை யுண்ணுவதனைச் சூரிய சந்திரரிருவருங் கண்டு இவர்கள் வஞ்சவேடங் கொண்டிருக்கும் அசுரரென மோகினிக்குக் காட்ட அம்மோகினி தன்கையிலிருந்த சட்டுவத்தால் அவர்கள் தலையைப் புடைத்தனர். அவ்வமுதம் அவர்கள் கண்டத் தில் வருமுன்னரே துணிக்கப்பட்டதனால் யாக்கை நீங்க அழியாத தலையையுடைய அவர்கள் மட்டினை நோக்கி, அமுதுண்டமையால் விண்ணில் இறவாரெனத் துணிந்து அவர்கட்குச் சிவபெருமான் திருவருள் பெறுவித்து அவர்களை ஏழு கிரகங்களுடனே சாயா கிரகங்களாகிய இராகு கேதுக்களாக வமைக்க. அவர்கள் பரம சிவனைப் போற்றித் தவஞ்செய்து கரும்பாம்பு செம் பாம்புகளாக விருக்க வரம்பெற்றுத் தம்மைக் காட்டிக்

கொடுத்த சூரியசந்திர ரிருவரையு மறைத்து வருவா ராயினார்.

பின்னர் சந்திர சூரியர்கள் இருவரும் மோகினிக்குத் தானவர்களைக் காட்டிக்கொடுத்த தோஷத்தினை நீக்கிக்கொள்வ தெங்ஙனமென வாலோசித்துத் தங்கள் குலகுருவாகிய பிரகஸ்பதி பகவானை யடுத்துக் கேட்க அவர் அவர்களை நோக்கி, ஐயன்மீர்! குறுமுனிவர் விருப்பத்தின்படி ஆகாயகங்கையானது குசை நுனியினின்றும் மிக்க குசலநதியாக விளங்குகின்ற ஆற்றின் தீரத்தில் *மகிமை பற்பல வாய்ந்துள்ள வலிதாயத்தினை யடைந்து எம்பெருமானைப் பூசிப்பீரேல் புண்ணியம் பெறுவீரெனக் கூற, அவ்வாக்கையினைச் சிரமேற்கொண்டு அத்தேவகுருவினிடம் விடைபெற்று வலிதாயமடைந்து பரத்துவாசதீர்த்தத்திற் படிந்து விபூதி ருத்திராட்சம் பூண்டு சிவமந்திர செப பாராயணஞ்செய்து சிவலிங்கப்பெருமானைப் பூசித்து வருகையில் சிவபெருமான் பார்வதிதேவியாருடனே இடபவாகனத்தின்மேல் காட்சி கொடுத்தருளக்கண்டு அவ்விருவரும் ஆனந்தக்கடலில் அழுந்தினார்கள். கங்கு கரையில்லாமற் பெருகிவரும் அன்புடன் கைகூப்பித் தொழுகின்ற சந்திர சூரியரிருவருக்கும் கைலாசபதியாகிய கண்ணுதற்பெருமான் அனுக்கிரகஞ்செய்து அன்பர்காள்! உங்கட்கு வேண்டும் வரம்யாது? சொல்லுங்களென்று திருவாய் மலர்ந்தருள, அவர்கள் கைகளைக்கூப்பிக் கண்ணீர்பெருக்கச் செந்தாமரை மலர் போன்ற திருவடிகளைத் தொழுது ஐயனே! மோகினிக்குத் தானவர்களைக் காட்டிக்கொடுத்ததனால் உண்டாகிய பாவமெங்களை விட்டொழிய வேண்டும். அவர்

* இக்குசலநதி சரித்திரம் பஞ்சேஷ்டிபுராணத்தில் சேது பேறுபெற்ற சருக்கத்திற்காண்க.



விஷ்ணு திருவலிதாயமடைந்து பரத்துவாச தீர்த்தத்தில் நீராடி விபூதி, உருத்திராக்ஷம் பூண்டு பெருமானைப்பூசித்துத் தன் பாபத்தைப் போக்கித் தன் பெயரால் ஓர் தீர்த்தமெடுத்தது.

கள் இராகுகேது என்னும் பாமபுகளாகி எங்களை மறைக்கிறபோதும விடுகிறபோதும உலகத்திலுள்ள சமுத்திரத்திலும நதிகளிலும தடாகங்களிலும ஸநானஞ்செய்து வரவேணடும. அககாலத்தில மநதிரஞ்செபிக்கின் அதுபலிக்கிடவேணடும அததகைய ஸநானமும் மநதிரமும இவ்வலிதாயததில பாதகஷவார நீாததததில் செயயின ஒனறு ஆயிரமடஙகாகப் பலன் சித்திகக வேண்டும் எனறனா. அஙஙனமே அவ்வரங்களைததநது அமலனு அநதாததியானமாயினா. சநதிர சூரியரும் தங்களுலகமடைநதனா. அதுமுதல் இநநகரம ஆதித்த புரமெனவும நிசிபதிநகரெனவு மழைககபபடடது.

சூரியசநதிரா பூசிதத சருககம முற்றிறறு.

---

## விண்டு பூசித்த சருக்கம.

சிவபாத விருதயாகளே! சலநதராசுரன் மூன்றுலகஙகளையும தனகாலினகீழ் அடங்கவைதது, வசசசக்கராதிபதியாய ஆளுஙகாலததில, இநதிரன முதலான திக்குப்பாலாகளையும, தாமரைப்பூவிலிருககும சதுர்முகனையும, துளபமாலை யணிநத திருமாலையும் அத்திருமாலுக்கு வாகனமாகிய, கருடனையும், நாகபபாசத்தினை கட்டிச் சிறையிட்டு வைததான, சிலநாள் செலலத தேவாகள் எலலாருமகூடடமாய வநது வணங்கி, அந்த வசுரனைவேண்டிகத திருமாலையும் கருடனையும் சிறையிலிருந்து மீடடுக்கொணடுபோனாாகள, பின்னர் அசுரன் தனக்குயாருமசமான மானவரின்றி வாழுங் காலத்தில், இடபவாகனனுகிய எமபெருமானுடன் யுத்தஞ்செய்யக் கருதிச சாவாயுத பாணியாய்ச்செல்ல, அவன் மனைவியாகிய பிருநதை அறிந்தோடிவந்து கணவனை மறித்துக்கொண்டு பிராணநாயகா! திருக்

கயிலைக்குப் போகவேண்டாம்; பரமசிவனுடனெதிர்த் தவர்களில் யார்வர் பிழைத்தனர். பிராணவானிவரு மென்று பலவகைகளாலே தெருட்டவுங் கேளாமல் தூறிகொண்டு ஊழ்வினை தூண்ட இரதாரூடனாகி, சமுத்திரபுறண்டதறகிணையாகநடக்குஞ சேனையைக் கலந்து கயிலையைக கிட்டினன. கண்ணுதற பெருமா னிதுதெரிந்து விருத்த சந்நியாசியாகிக் குண்டிகையுங் குடையுந்தாங்கி, கோலூன்றித தள்ளாடிக்கொண்டு, சலந்தரனெதிரிலே வந்து, இராக்கதராசனே! நீயார்? எவ்விடமிருப்பது, யாரைத்தேடி இத்தலத்தில் வந் தாய், சொல்லுமென்று கேடக, அசுரன், எனபெயர் சலந்தரன் பிரமாதி தேவர்களனைவரையும வெற்றிக் கொண்டு சிவனுடன யுத்தஞ செயயவந்தேனென்று மறுமொழி கொடுகக, அவனைப்பார்த்து, நகைத்து நாம இறையவன் சந்நிதானத்திலிருந்து, அவர் வல்ல பங்களனைத்தினையும அறிந்திருப்போம, பரமசிவத் துடன போர செயவையாயின், இறந்துபோவாய, இன னுஞ சிலகாலம உயிருடனிருக்க மனமிருந்தால திரும பிப்போவது தகுதி யென்று சொன்னார். உடனே சலந்தரன வடவாமுகாக்கினியைப்போலக் கோபித் துத் தேகமெங்கும வியர்வை யரும்பப் புருவம நெற் றியிலேற, மீசைதுடிக்க அக்கினியும புகையும பெருகப் பெருமூச்செறிந்து, நீர என்னைச சிறியவனாக நினைந்தீர், என வெற்றிகளையும வன்மையையும சொல் லியாவதென்ன, சில நேரம பொறுத்து புயபல பராக் கிரமத்தைப் பாருமென்றுரையாட, அதைச் சிவபி ரான் கேட்டு, நல்லகாரியம உன சவுரியத்தையும வலி மையையும அறியத்தான வந்தோமென்று தமது பாதப் பெருவிரலினாலே பூமியில் வட்டமாகக் கீறி, சலந் தரனே! உன்வல்லபத்தினால் இந்தவட்டமான பூமியை யெடுத்துச் சிரசிலே தாங்கமாட்டுவையோ? என்று

கேட்க, அவன் நகைத்து, இதோபாருமென்று ஹுங்கா ரித்து அந்தச்சக்கரத்தை ஒருகரத்தின்மேல்நிறுத்தி மற்றக் கரத்தையுந் தாங்கித் தூக்கப்படாமையால் மார்பில ணைத்து அரிதினெடுத்துச் சிரசில் வைத்தான். இதைக் கண்ட தேவர்கள் இவன் வலியே வலி, சூரனென்பது இவனுக்கே தகுமெனக் கொண்டாடினார்கள். அத் தருணத்தில் அந்தவட்டமான பூமி கோடி சூரியப்பிர காசமான சக்கராயுதமாகிச் சலந்தரனுடலை இருகூறா கப்பிளந்து தள்ளியது. பின்பு அச்சக்கரம் இறையவ னிடத்திற் சேர்ந்தது. சலந்தரன் இறந்தமையை விண்டு தெரிந்துகொண்டு அவ்வசுரன் தேவியாகிய விருந்தையின் சௌந்தரியத்தினைக் கண்டு அநேக நாளாக மையல்கொண்டிருந்த அவர் இதுதான் தருணமென்றெண்ணி, கபட சந்நியாசி வேடங் கொண்டு சலந்தரன் அரண்மனையில் வந்தனர். அவள் விதனமுற்றிருக்கிற நந்தவனத்திலொரு குருக்கத்தியின் நீழலில் தவத்தைச் செய்கின்றவனைப் போலிருக்க, விருந்தையானவள் நமது கணவன் செய்தியொன்றுந் தெரியவில்லையே, என்னசெய்வே னென்று வெதும்பி வாடி மயங்குபவளாய், இருதலைக் கொள்ளியில் அகப்பட்ட எறும்புபோல அலைந்தும் ஒன்றுந் தோன்றாமலும் அரண்மனையிலிருந்து பூஞ் சோலையினிடம் வந்தாள். அத்தருணத்தில் கோவணக் கட்டைப்படிக்கு வைத்திருந்தவாயிலைப்போற்றும் துவார பாலகர் இருவர் புலிவடிவங் கொண்டு சீறி அவளெதி ரிற் பாய அவளதைக்கண்டு அபய மென்று நெருக்கி னாள். அக்கபட சந்நியாசி பயப்படாதேயென்று கைய மைத்துப் புலிகளையதட்டித் துரத்திவிட்டனர். அப் போது அவ்விருந்தை அவரைப்பார்த்து, என்னிஷ்ட தேவதையைப் போலவும் பிதாவைப்போலவும் இத் தருணத்திற் காட்சிகொடுத்த தபோநிதியே! என்கண

வன் பரமசிவத்தின்பேரிற் சண்டைக்குப் போயினர். இதுபரியந்தம் அவா வரக்காணேன். செய்தியொன்றுந தெரியவில்லை, தேவரீருககுச சகலமுந தோன்றுமாதலால அவா இறநததும இருப்பதும், அனுக்கிரகஞ் செய்யவேணடு யென்பிரநதாள். அக்கள்ள சந்நியாசி நல்லகாரியம சற்றிவ்விடத்திரும திருட்டாந்திரமாகக காட்டுவோமென்று தபகெண்ணப்படிக்கு ஆதியிற்புலியாக வநத துவாரபாலகா குர்ங்காக சிறகக் குறித்து அவரை நோகக அவரோடிபபிளந்து கிடந்த சலந்தரனுடலைக் கொணடு வநது சோத்தாாகள். அப்போது, அவள இருகூருயிருககிற கொழுநனைக் கணடவுடன பதைபதைததது விழுநது புரணடரற்றி, மரண மூாசசையாயினள் அக்காலத்தில் முனனம் அவளிடத்தாசைபெறறிருநத சநநியாசி அவளைவாரியெடுதது, மாபிலணைததுககொண்டு சயிததிய வுபசாரங்களைசசெயது தேறற, அவள் தெளிநதெழுந்து சநநியாசியைச சேவிதது, உமமையொதத மகதது வமுடையவாகள் எங்குமிரார. அடியேன் பிராணனைக் காததாறபோலவே எனகணவன தேகத்தையுமபொருததி உயிருணடாககிப் புருஷ பிசசைச தரவேண்டுமென்று போற்றினள். அசசநநியாசி நல்லதென்று சலந்தரனுடலைசசோத்து, அதில் தான் பிரவேசித்தெழ, அவ்வநத விருநதை கணடமாத்திரததில் ஆனநத வாரியில மூழ்கிக கொழுநனைச சேவிததுத்தழுவி இருவருமாய் மாளிகையைசசோநது, அறுசுவையுணடியைப் புசித்துக் கலவைச சாந்தணிநது, பரிமளமிகுந்த புட்பமாலைகளைச்சூடிப் பஞசணை மெத்தையில் சரசசல்லாபங்களைச் செய்து, இனபமுறறு, இவ்வகையாக அளவற்ற காலம் இடைவிடாமல் களித்திருநதார்கள்.

ஒருதினம், அம்ச தூளிகாசயனத்தில் மெய்மறந்து முகுந்தன் நித்திரை செய்யப்பரமசிவன் கட்டளைப்

படி விஷ்ணு கோலந்தோற்றியது. அதைக்கண்ட பிருந்தை நடுநடுங்கி இவன் மாயனாகுமென்று நிதானித்து நடந்தவிருத்தாந்தங்களை யெல்லாந் தன்னறிவாலறிந்து கொண்டு, புலியாக வந்த உன்னையல் காப்போர் உனக்கு வயிரிகளாக அரக்கர் குலத்துதிக்கப் கடவர் நீயும் பூமியிலரசர்குலத்திற் பிறந்து, என்னை வஞ்சித்தபடியே உன்பத்தினியை அவ்வசுரர் கொண்டு போய்விடக் குரங்கினங்களைச் சேர்த்துக்கொண்டு வனங்கள் முழுது மலைந்து உழன்று உலகோரிழந்து பழிகூறத் தாழக் கடவா யென்று கொடிய சாப மீந்து, அக்கினியை வளர்ப்பித்து அதில் விழுந்திறந்தாள். இதைக்கண்ட விஷ்ணு அவளிடம் வைத்த ஆசையினுலேங்கி வாடிவருந்திப் பிருந்தை யிறந்த சுடலைப் புழுதியில் விழுந்து புரண்டு பிரலாபித்துக் கொண்டிருந்தனர், பிரமன் முதலிய தேவரறிந்து திருக்கைலை யடைந்து இறைவன் திருவடிகளைப் பணிந்து விண்டுவிற்கு நேர்ந்த கதியினை விளம்பக்கேட்ட பரமன் புன்சிரிப்புக்கொண்டு உமாதேவியைப் பார்க்க, அம்மையார் கிருபையுற்று ஒரு வித்தை யுண்டாக்கித் தந்து, இதனைக் கண்ணன் முன் நாட்டக்கடவீரென்று கொடுக்க, நான்முகன் வணங்கி வாங்கிக்கொண்டுபோய், பிருந்தை யிறந்த மயானத்திற் சாம்பலைப்பூசி மயங்கிக்கிடக்கின்ற கேசவன் எதிரினட்ட, அது துளசியாகமுளைத்து உடனே திவ்வியவடிவுடைய பெண்ணுருப்பெற்று நிற்க அவளைத் தாமோதரன் கண்டு, பிருந்தையிடத்திலுள்ள மயலையொழித்து அவள்மீது மோகமாகி அவளை மணஞ்செய்துகொண்டு * வைகுண்ட மடைந்து வாழ்ந்த விண்டுவானவர் நடந்த வற்றைமனதிலெண்ணுவாராயினர், என்னகாரியம் செய்துவிட்டனல், சாமான்

---

* வைணவர்கள் பிருந்தாவன வேடிக்கை கொண்டாடுவது இச்சரித்திர சம்பந்தத்தாலேயே யுண்டாயது.

ணியமான தேவர்களும் நகைக்கத்தக்க விஷயத்தினை நாடினேன். பிருந்தையின அழகினைக்கண்டு மயங்கி வஞ்சகமாய் அவள் கற்பினை கெடுத்துச் சாபமேற்றனன் என்னைப்போன்றா இத்தகைய இழிவான காரியத்திற பிரவேசித்தல் தகுமா. என்னறிவை யெங்கே சிந்தினேன. அற்பமாகிய சிற்றின்பத்தினுக்கு ஆசைப்பட்டு அவலனாயினேன். அந்தோ! இச்செய்தி எவ்வுலகும் பரவி நிலைபெற்றுவிட்டதே. இனி இதைமாற்ற யாரால் முடியும். ஐயோ! இதன் பொருட்டு ஒரு சென்மமும் உலகத்திலெடுக்கும்படி நேரிட்டதே. அச்சென்மத்தில் என்னென்ன பாடுபடவேண்டுமோ அறியேனே, கற்பினிற் சிறந்த காரிகைமார் சாபம்வீண் போகாதே, அனுபவித்தே தீரவேண்டும் தேவாதிதேவனாகிய மகாதேவனை யன்றி மாயையில் மயங்காதவர் யாவர்? ஒருவருமில்லை, இது இங்ஙனமாயினும் கற்பினைக் கெடுத்ததனாலுண்டாகிய மகாபாவத்தினை யெப்படி நீக்கிக் கொள்வது? இதற்கெங்ஙனம் பரிகாரந் தேடுவது என்று வெகுநேரமாலோசித்து, தெளிந்து சிவசிவா! சம்போ! சங்கரா! மகாதேவா! வலிதாய நாதனே! உன்னைவிட வேறுகதியேது? இதோ உன் தலத்திற் கோடிவருகிறேன அவ்வெல்லையினை மிதித்த மாத்திரத்தில் எத்தகைய பாவமும் பஞ்சாய்ப்பறக்குமென்பது நானனு போதத்தி லறிந்திருக்கிறேன். இதுசத்தியம் சத்தியமென, உடனே விஷ்ணுவானவர் வைகுண்டத்தினின்று நீங்கி வலிதாயத்தினை யடைந்து பரத்துவாசதீர்த்த நீராடி விபூதி உருத்திராட்சம் பூண்டு, ஆனந்தக்கண்ணீர் பெருக வலிதாய நாதனைப் பூசை செய்து பேரன்புபூண்டு வாழ்ந்திருக்கையில், சந்திரசேகரனாகிய சிவபெருமான் பிரத்தியட்சமாகி விண்டுவே! உன்பாவம் விமோசனமாயிற்று எனத் திருவாய்மலர்ந்தருளி, மறைந்தருள, நாரணன் கேட்டானந்தித்துப்,



இயமன் திருவலிதாயமடைந்து சிவலிங்கபூசைசெய்து, சிவாபராதத்தைப் போக்கிக்கொண்டு
)க்குவந்து ப[illegible]ஏறவர்களுக்கு ஏமபயமில்[illegible] வரமுபெற்றது.

பாடியாடிப் பலதரம் வீழ்ந்து வணங்கி விடைபெற்று வைகுந்தஞ்சென்று சிவஞானத்துடன் வாழ்ந்தனன். விண்டு இந்நகரில் பங்கயங்கொண்டு பூசித்தமையின் பங்கயபுரமென வொருபெயர் வழங்கியது. (பங்கயம்-தாமரை.)

'விண்டு பூசித்த சருக்க முற்றிற்று.

## இயமன் பூசித்த சருக்கம்.

சிவபத்த விருத்தர்களே! துவாபரயுகத்திலே சூரியகுலத்திலே சுவேதனென்று ஒரு அரசனிருந்தனன். அவனுக்கு சுலோசனை யென்னு மனைவியிருந்தாள், இச்சுவேதன நெடுங்காலமரசாட்சிசெய்து கொண்டிருந்து பின்பு இராஜாங்கத்தில் வெறுப்படைந்து தனது புத்திரனாகிய வாநாவி யென்பவனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து வைத்துத் தான் தன்மனைவியுடன் வானப்பிரஸ்தமடைந்து அரிய தவஞ்செய்து கொண்டிருக்கு நாளிலே, சுலோசனை சிவபதமடைந்தாள். அதுகண்டு சுவேதன் மனம் வருந்தி யொருவாறு தேறிக் கவலை நீங்கி, பெரியநாயகி யம்மை சமேதராகச் சுவேதாரணியேசுரர் எழுந்தருளி யிருக்கும் திருவெண்காட்டினையடைந்து முக்குள நீரென்னுந் தடாகத்தினருகு, சிவலிங்கப் பெருமானுக்குச் சமீபத்திற் தவஞ்செய்து கொண்டிருக்கு நாளிலே, ஒரு நாள் இயமனென்பவன் அவனுக்குச் சமீபத்திற்குறுகி மேகமானது மின்னலினை வீசியதுபோலக் கயிற்றினை யவன் கழுத்திற்பூட்டினன், சுவேதன் நடுநடுங்கிச் சிவலிங்கப் பெருமானைச் சேர்த்து ஆலிங்கனஞ் செய்து கொண்டனன், அப்போது எமன் அரசனை நோக்கி, சுவேதனே! இச்சங்கரனோ? என்னிடத்தினின்று

முன்னை மீட்டவன ! சிங்கத்தினை யொரு யானை தடை செய்யுமோ ? எத்தனைகோடி நாரணாகள், எத்தனை கோடி கோடி பிரமாகள், எத்தனை கோடி கோடி கோடி இந்திராகள எமன கையினு லழிவுபட்டனா இறுதிகாலமவரின ஒருசிறு முள்கிழிக்கவு மயிர்நீங்கு வா, வச்சிரதேகந்தினை யுடையவராயினுமவாழ்வதில்லை கண்டாய். வெகுண்ட யானைக் கூட்டங்கள் விலக்கினும் விலகேன. மருந்த தவத்தினாகள் தடுத்திடினு மடங்கிலேன, காலபிடித்து வணங்கி கெஞ்சுகரையப்பேசினு மிரங்கிடேன. அங்ஙனமாகத் தோலுடுத்த இத்தேவனோ தடைசெய்வன சொல்லுக. என்று கூறி இடியினைப்போல முழங்கி, பகடு உதட்டினைப பற்களாற்கடித்து, கரங்களைப பூமியிலறைந்து, சிவந்த கண்களினின்றும் அழலசிந்த நெருங்கின வுடனே சுவேதகனடு நில்லடா நில்லடா ! எமனே நன்று நன்று உனபிரதாப மெனநகைத்து, அந்தகா ! என்னை வெருட்டுவ தென்னை ? தோடா நான சொலவதனை, திருமாலும பன்றியாகித் தேடியு மறியவொண்ணாத திருவடி யெனககுற்றதுணையாம. முப்புரத்தினை நகைத்தெரித்தவன, மூவருக்கருள் செய்தவன அனபாபவ ரோக வயித்தியன, மங்கைபாதியன, மாரவேளை யெரித்தவன அவனுக்கு அனபனாகிய நானுனக்கு, அஞ்சுவனோ ? சந்திரசேகரன, கருணாகரன், பக்தவசசலன, நித்தன அற்புதன், நீலகண்டன, நிராமயன, நின்மலன் அவருக்கு அனபனாகியநானுனக்கு அஞ்சுவனோ ? பிரமாதி தேவாகளின் மனைவிமார்களின் மங்கல நாணநிலைபெற ஆலத்தினை மிடற்றிலடக்கிய அமலனுக்கு அனபனாகியநானுனக்கு அஞ்சுவனோ? விபூதி யணியாதவா, உருத்திராட்சம் பூணாதவா, பஞ்சாட்சரந் தியானியாதவா, சிவபூசை செய்யாதவர், உனைக் கண்டஞ்சுவர் அவர்களிடத்தில் உன்வல்லபம்பலிக்

கும். நீ என்செய்வாய் அப்பால் நட வென்றனன், மறலிகேட்டுக் கோபங்கொண்டு மன்னனை யெட்டிப் பிடித்தனன் அப்போது சுவேதன்! சம்போ! சங்கரா! மகாதேவா! சதாசிவா! சச்சிதானந்தா! என்றலறினன். அத்தட்சணமேகருணை நிதியாகிய கண்ணுதற் பெருமான் வெளிவந்து கட்கம், கேடகம் வில்லு, வாளி, கணிச்சி, சூலமெடுத்தடர்ந்து உட்குமாறுதுரத்தினன். நமனுங் கிழேவிழுந் தெழுந் தோடினன். சுவேதன்கண்டு ஆனந்தங்கொண்டு பரவசமாகிப்பலவாறு சிவபெருமான் நித்திய கல்யாணசுந்தர குணங்களைத் தோத்தரித்துப் பழையபடியே தவஞ்செய்து கொண்டிருந்தனன.

ஓடிய நமன பிழைத்தேன் எனக்கூறி யோரிடந் தங்கி, என்செய்தேன்! என்செய்தேன! சிவாபராதம் அடைந்தேனே என்புத்தி யெங்கேபோயிற்று, சிவனடியார்கட்குத் தீங்குசெய்ய நினைத்தேனே, விபூதி உருத்திராடச பஞசாட்சரமகிமையினை நன்கறிந்திருந்தும், செந்மாந்தர வினையால் மயங்கி மதியாது நெருங்கி உதையுண்டு ஓடிவந்தேனே, என்சென்மமு மொரு சென்மமா? எனைக்கொல்லாது விட்டது என்பூர்வ புண்ணியமும, சுவேதனைத் தரிசித்ததினால் வந்த பாக்கியமுமாம். என்பிழைப்புமொருபிழைப்பா? சிவனடியாரிடத்து எனசாமாத்தியம தலையெடுக்குமா? அந்தோ! மார்க்கண்டேய முனிவரிடஞ்சென்று அப்போது நோந்த ஆபத்தினை நினைக்குந்தோறும் இதயந் துடிக்கின்றதே. அதையிவ்வளவு சீக்கிரத்தில் மறந்து இக்காரியஞ் செய்யத்துணிந்தது என் கன்மவசமென்பேனா? எனக்குண்டாயிருக்கும் இறுமாப்பென்பேனா? இப்பாவத்தினை யெவ்வாறு எவ்விடத்தி லொழிப்பேனெனச் சிந்தித்துக் கொண்டிருக்கையில், நல்வீணையேந்தி நம்பரமனையே பாடும நாரதபகவான் சந்தித்து நமனே! என்னகாரியஞ் செய்தாய், சிறிது காலத்தி

ற்கு முந்தியுனக்குத் திருக்கடையூரினேர்ந்த விபத்தினை மறந்து இங்ஙனஞ் செய்யத்துணிந்தாய் இனியேனுஞ் சிவனடியார்களைக்கண்டு பயந்து வாழக்கடவாய், இப்போது உனக்கு நேர்ந்துள்ள பாவத்தினையொழிக்கவகை தேடுவாய். அதற்கோருபாயம் நானே சொல்லுகிறேன். கவனிப்பாயாக. எத்தகைய பாவச்செயல்களையும் எல்லையின்றி மிதித்தமாத்திரத்திலே போக்கடிக்கத்தக்க புண்ணியத் தலமாக விளங்குவது வலிதாயம். அதனருமையினை நாமெடுத்துச் சொல்லுந் தன்மை யுடையேமல்லேம், நீ சென்று நேரே கண்டு அவ்விடத்துச் சிவலிங்கப்பெருமானைப் பூசித்துப் புநிதனாகக் கடவாயென்று கூறி வழியே சென்றனர். இயமன் கேட்டு இருகரங்களையும் சிரமேற்கொண்டு வடக்கு நோக்கி நடந்து அதிசீக்கிரம வலிதாயத்தினை யடைந்து குசலநதியில் மூழ்கி, விபூதி உருத்திராக்கம் பூண்டு பரத்துவாசத் தீர்த்தக்கரையில் ஜெபதபங்கள் முடித்து, சிவலிங்க பூசை பற்பல நாள் பணிவுடனே செய்து வருகையில் சிவபெருமானே பிரசன்னமாகி, இயமனைப் பார்த்துக் காலனே! உன்னை மன்னித்தோம், சிவாபராதம் உன்னைவிட்டு விலகியது, இனியேனும் சிவனடியாரிடத்தில் நெருங்காது வாழ்வாய், நீ இத்தலத்தில் என்னைப் பூசித்தமையால் இங்குவந்து பணிகின்றவரெவருக்கும் எமபயமுண்டாகமாட்டாது என வரங்கொடுத்தருளி அந்த லிங்கத்தின் இடமாக அந்தர்த்தானமாயினர். பாவந்தீரப்பெற்ற இயமன் காலகாலனாகிய சிவபெருமானைச் சிந்தித்துக்கொண்டே தன்னுலகடைந்து சுகித்திருந்தனன். அதுமுதல் லிங்கத்திற்குத் தருமபுரமெனப்பெயர் வழங்கலாயிற்று. (தருமன் - யமன்.)

இயமன் பூசித்த சருக்கம் முற்றிற்று.

---



விக்கிரமசோழன் தன் மனைவியாருடன் திருவலிதாயமடைந்து திருவிழாக்கள் முதலிய அநேக புண்ணியங்கள் செய்து புத்திரப்பேறு பெற்றது.

## திருவிழாச் சருக்கம்.

சிவபஞ்சாக்கிர நாவினர்களே! காவேரிநதியினைத் தனக்கங்கமாகவுடைய பொன்னிநாட்டினை யரசாட்சி செய்து வந்த விக்கிரமச் சோழனென்னும் அரசனது சபையில் ஓர் நாள் வைதிக சைவ சித்தாந்த செல்வராகிய ஓர் சிவனடியரெழுந்தருளினர். அரசன் அவ்வடியாரைத் தரிசித்தவுடன் எழுந்துவணங்கி விபூதியேற்று உபசரித்துச் சொல்லுவானாயினன். சுவாமீ! அடியேன் அநந்த கல்யாணகுண பரிபூரணரான சிவபெருமான் திருவருளால் பொன்னுலகத்திந்திரனைக் காட்டிலுமிகச் செல்வத்தினை யனுபவித்து வருகிறேன். அங்ஙன மிருந்தும், புத்திரப்பேறின்மையினாலுண்டாகுஞ் சஞ்சலம அதிகமாயெனனை வாட்டுகின்றது. அல்லும் பகலும் நித்திரையின்றி யேங்குகின்றேன். தேவரீர் தயைபுரிந்து ஏழையேன் கவலை நீங்கும் வண்ணம் ஒரு சூட்சி சொல்ல வேண்டுமென்று இரந்தனன். சிவனடியார் அரசனைநோக்கி, "ஐயா! இதோ என்பால் புண்ணிய ரூபமான க்ஷேத்திரக் கோவை என்னுமோர் நூலிருக்கின்றது. இன்று சோமவாரமா யிருத்தலின் இதனை யன்புடனே பூசித்துக் கயிறு சாத்திப் பார்ப்பையேல், அதிலெந்தப் புண்ணியத்தலங் காணப்படுகிறதோ, அத்தலத்திற்குச் சென்று அங்கெழுந்தருளியிருக்கு உமாபதந சரீர திவ்ய மங்கள் விக்கிரகத்தினைப் பூசிப்பையேல் புத்திரப்பேறுண்டாம் என்றனர். அங்ஙனமே அரசன் கயிறு சாத்தலும 'திருவலிதாய க்ஷேத்திரம்' வரக் கண்டு அளவிலா மகிழ்ச்சியடைந்து, அத்தலத்தினை இப்போதே தரிசிக்க வேண்டுமென்று பேராசையுற்றுத் தனதரசினை யமைச்சர்பாலொப்புவித்துத் தனது கற்பினிற்சிறந்த மனைவியுடன் வெளிப்பட்டுத் திருவலிதாயத் தினையடைந்து, தீர்த்தமாடி ஆலயத்துட் சென்று சிவார்ச்சனைபுரிந்து, கண்குளிரத்தரிசித்துத்

துதித்து வணங்கி அப்பாற்போந்து ஊகைமாதாவாகிய தாயம்மையைப் பூசித்துக் குறையிரந்து நிற்க, அம்மையார் திருவுளமுருகிப் புத்திரசந்தானமுண்டாகும்படி வரந்தந்தருளினார். அவ்வரம் பெற்ற வரசன் மன்மகிழ்ந்து மீட்டும் வணங்கி விடைபெற்றுப் புறம்போந்து ஓராண்டளவும் சிவபுண்ணியங்களைச் செய்துகொண்டிருந்து மதில்கள், மண்டபங்கள், கோபுரங்கள், மடவளாகங்கள், மாடவீதிகள் உண்டாக்கிப் பின்னொருநாள் திருவிழாநடத்தத் தொடங்கினன். அரசன் கட்டளைப்படி ஆதிசைவர்கள் எண்ணிறந்த திருவாபரணங்களையும் பீதாம்பரங்களையும் பெருமானுக்கு அணிந்தனர். எங்கணுந் தோரண நாட்டினர். நவரத்தின மிழைத்த தம்பங்களில் வாழை முதலியவை கட்டினர். பூப்பந்தர்கள் சந்நிதிகளிற் றாக்கினர் வீதிகளிற் கோலமிட்டனர். சித்திரை மாதத்திற் பூர்வ பக்கத்தில் புனர்பூச நட்சத்திரத்தில் கொடியேற்றிப் பல விழாவாற்றி, முதனாண்முதல் பத்துத்தினங்கள் வரையில பல்பல வாகனங்களிலேற்றி ஆனைமுகன் ஆறுமுகன் சண்டேசன அம்மையாருடன் அரனுக்குத் திருவிழா வாரம்பித்து, காலையில் வீதிவலம் வந்தபின்னர், இரவில் மறையவர் வேதபாராயணஞ் சொல்லவும், குங்கிலிய தூபமெங்கும் வீசவும், அடியார்கள் நாமாவளி கூறவும், வெண்குடை நிழற்செய்யக் கவரி ஆலவட்டம் சாந்தாற்றி நெருங்கவும், கொடிகள் தாங்கவும் எள்விழுதற்கிடமின்றிப்பலர் சூழ்ந்தனர். சூரியன் சந்திரன் நட்சத்திரம் யானைசிங்கம் போன்ற தீவர்த்திகள் முன்னும் பின்னு மேந்த, பேரிகையாழ் கைப்படகம், பறை, முரசு, குடமுழவு, சின்னம், பூரி, எக்காளம், சங்கம், தாளம், தண்ணுமை முழங்கவும் வெளிவந்தனர், வீதிகடோறுங் கும்ப மமைத்தனர், மேவதியர்கள் அட்ட மங்கலத்துடனே தட்டுகளில் தேங்காய்



திருவலிதாய க்ஷேத்திரத் தீர்த்தங்கள். 1 பரத்துவாச தீர்த்தம். 2 விஷ்ணு தீர்த்தம். 3 பிரம தீர்த்தம். 4 அகஸ்திய தீர்த்த . 5 அனும தீர்த்தம். 6 விருத்த க்ஷீரநதி.

செய்யவும், சில அடியா ராடவும் சில வடியார் பாடவும் மாலயற்கரியோன் வந்தான், அன்பருக்கெளியான் வந்தான், இருக்கினி லிருப்போன் வந்தான், மறையினில் மறைந்தோன் வந்தான், வலிதாய நாதன்வந்தான், தாயம்மைத்தலைவன் வந்தான் என்று தோத்திரிக்கவும் இந்தகையை ஆடம்பரத்துடன் மாடவீதி வலம்வந்து தூலலிங்கமாகிய கோபுரவாயிலை யடைந்தவுடன், ஆதிசைவர் நிவேதனத்துடன் தீபாராதனைகாட்ட, உருத்திரகணிகைகள் தாள விசை மருவிய நடனமுடன் ஆலத்தி சுழற்றி எச்சரிக்கை சோபனம் பாடினர். நந்தியெம்பெருமான் முன்னேக ஆலயத்துட் பிரவேசித்துப் பெருமான் எழுந்தருளினன். இவ்வகையாய் பத்துத் தினங்களும் பலவாகனம் பல விமானம் தேர் மீதிற் கொண்டாடித் தீர்த்தமாடி, அடுத்தநாள் மவுன பலிதூவி, பிறபூசையுஞ் செய்து இடபக்கொடியை யிறக்கினர். அரசன் அத்திருவிழாக்களில் அநேக பூதானம், சுவர்ணதானம் அன்னதான முதலியசெய்து திருவலிதாய நாதனை தரிசித்து விடை பெற்றுக் கொண்டு தனது நகரத்தினையடைந்து, புத்திரர் பௌத்திராகளை வாய்ந்து, தெய்வங்கட்குந் தெய்வமாகிய திருவலிதாய நாதனது கலியாணசுந்தர முதலியகுணங்களையே சிந்தனை செய்து கொண்டிருந்து சுகமாக வாழ்ந்து வந்தனன்.

திருவிழாச்சருக்க முற்றிற்று.

---

## தீர்த்த மகிமைச் சருக்கம்.

### பாரத்துவாச தீர்த்தம்.

மனமடங்கப்பெற்ற மாதவர்களே! மும்மலங்களையும் போக்கு முத்திச்செல்வங் கொடுத்தருளுந் திருவலிதாயத்துச் சிவாலயத்தின் தென்திசையிலுள்ள

பரத்துவாச தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யப்பெற்றோர் புண்ணியத்தை யடைவார்களென்பதிற் சந்தேகமில்லை. தண்ணீரிலலாவிடினும், வேறு சலங்கொண்டு வந்து அவ்விடத்தில் விட்டுப், பின அத்தீர்த்தத்தை எடுத்து உட்கொள்ளினும், சிரசின்மேற் புரோட்சிததுக்கொள்ளினும உலவா வரும் பெருமணி பொன்னிதியையும், முப்போகம விளையு நன்னிலஙகளையும. நற்குண நற்செயலுறு நன்மனைவியையும், நல்லறிவுடைய நன மக்களையும, பௌவமதகற்றும பல கலைஞானத்தையு முததியையும பெறுவா. அததீாததத்தில் விருச்சிக மாததிலே சோமவாரததிலே சூரியோதய மாகும் போது ஸ்நானம செய்பவா பின்னோபோதம பிறவிக் கடலில மூழ்கா. அததீாத்தத்தில் அமாவாசையில் தததம பிதுாககளுக்குத தருப்பணமொருவன செய்வாறாயின், அவன பிதுருககள் கண்ணுதலுறையுங் கயிலாயமடைநது நிததியானநத பரசுகமெய்யப்பெற் றுய்வரெனறறிவீா.

## அநுமதீர்த்தம்.

பறறறு விளங்கும பரமாமுனிகாள்! இகபர சுகங்களைக்கொடுககும வலிதாய நாதனாகிய சிவபெருமான திருவோலககங கொண்டெழுநதருளிய ஆலயத தின குணதிசையிலுள்ள அனுமதீாததததி விருநது சறபாததிரமாயுள்ள சிவனடியா ரொருவருக்கு ஓர் கவள அனனமேனும இடுவாறாயின, அவனெக்காலத் தும வெள்ளியங்கிரியை விட்டு நீங்காத நல்வாழ்வு பெறுவான். மகாபாவிகளாயினும இழிந்தகுலத்திற் பிறந்தவாகளாயினும் இநததீாததத்தில் அடைவுடன் ஆட்ப்பெற்றவர்கள் அவாகள் குற்றங்களினின்றுங் கறை ஏறுவதன்றி, அறம் பொருளின்பம் வீட்டைப் பகரும் புருடார்த்த நான்கினையும் பெறுவர்.

## பிரமதீர்த்தம்.

தத்துவஞானத் தபசிகளே! மலிதரு பிறவித்துயர்தனைப்போக்கி மாண்பெறு முத்தி யின்பத்தைக் கொடுக்கும் திருவலிதாயத்தின் குடதிசையில் பிரமதீர்த்த மொன்றுள்ளது. அத்தடாகக்கரையில் உத்திராயண தட்சணாயனங்களிலும் சூரிய சந்திர கிரணங்களிலும், அமாவாசை பருவங்களிலும், விதிபார்த்திம மாதப்பிரவேசங்களிலும், மாலியபட்சத்திலும், மற்றைய புண்ணியகாலங்களிலும் சிராத்தம் செய்யின் அந்தப் புண்ணியத்தினளவு கணக்கிடையாது, அன்றியும் இத்தினங்களோடு, பொன்னேனும், பூஷணமேனும், வஸ்திரமேனும், பொருளேனும் இந்தத் தீர்த்தக்கரையிற் சிவனடியார்களுக்குத் தானஞ்செய்யின், இம்மையிற் பெருஞ் செல்வத்துடன் வாழ்ந்து, பின்னர் மறுமையிற் கிடைக்கருஞ் சிவாலந்த சாகரத்தின் மூழ்குவர்.

## அகத்திய தீர்த்தம்.

பாசவைராக்கிய பாக்கியவான்களே! மணமது மருவியபூவினா விழுபனி பலாசமோலை பாங்குடன் சூழ்ந்த ஆலயத்தின் வடதிசையில் புகழ் பெற்றோங்கும் அகத்திய தீர்த்த மொன்றுளது, காண்பீர். இதில் படிந்தவர்கட்கே யல்லாமல், இந்நீரினை அந்நிய தேசங்களுக்கு ஒழுக்கத்துடன் கொண்டுபோய அன்புடன் முழுகுவோர்க்கும் மிகுபுண்ணியமுண்டாகும். இவ்வரிய தீர்த்தத்தின உதவியால் மீன்களுக்கும் புல்கொடி மரமாதியவசேதனப்பொருளும் மோட்சமடையுமெனில், இகபரசாதனங்களை நனகுணரும் சேதனராகிய மானுடர்கள் வீடடைவாரெனபது அதிசயமாமோ! கூறுவீர்.

## க்ஷீரத்தீர்த்தம்.

முத்திச் செல்வத்திற்குரிய முனிவர்காள்! திருவலிதாயமாகிய பிரமபுரியை யடுத்த விருத்தக்ஷீர நதியினீரிலே ஏலம இலவங்கம விலாமிச்சு முதலிய வாசத்திரவியங்களைக் கலந்து நூறு குடங்கொண்டு வலிதாய நாதருக்கு மகாபிஷேகஞ் செய்பவர் கல்வியறிவில்லாதவர் கல்வி யறிவெய்தப் பெறுவர்; பொருளில்லாதவர் பொருள் கிடைக்கப் பெறுவர்; இடமில்லாதவர் இடமணுகப்பெறுவர், விவாகமில்லாதவர் விவாகங் கூடப்பெறுவர். புத்திரப்பேறில்லாதவர் புத்திரப் பேறெய்தப்பெறுவர். ஆயுளில்லாதவர் தீர்காயுளடையப்பெறுவர். இவை முதலாகிய வைஸ்வரியங்கள் பலவும் இனி தடைந்துய்ந்து, பின் திருக்கயிலாயஞ்சேர்ந்து சிவசொரூபமுற்றுப் பேரின்ப மெய்தப் பெறுவர்.

நஞ்சமார் நீலகண்டனுக்குகந்த நைமிசாரணிய மாதவமுனிவீர்! பிரணவாகாரமாகிய பூக்கள் நிறையப் பெற்ற கொன்றை மரத்தி னீழலிலே, தாயம்மை சமேதரா யெழுந்தருளியிருக்கும் வலிதாய நாதரின் சிறப்புப் பொருந்திய மான்மியத்தினை, நாஞ்செய்த முற்றவப் பயனாலின்று ஓதவுங் கேட்கவும் பெற்றோம் நாஞ்செய்த தவமென்னே தவம்! இம்மான்மியத்தினைத் தத்தம வீடுகளில சோமவார முதலிய புண்ணிய தினங்களில அன்புடனே படிப்பவரும அதனைக் கேட்போரும இம்மையிலே தாம விரும்பிய புத்திர பௌத்திர களத்திராதிகளுடனே சகல் வைஸ்வரியம பெற்று வாழ்ந்து மறுமையிலேசிவபெருமானது திருவடி நீழலில வீற்றிருந்து பிரமபாநந்த சுகம பெறுவர்; இது சத்தியமென்று கூறியருளினர் நற் சூதமாமுனிவர்.

தீர்த்த மகிமைச் சருக்கம் முற்றிற்று.














பாடியென வழங்கும் திருவலிதாய க்ஷேத்திரத்திற்கு, திருமயிலை, திருவான்மியூர், திருவேற்காடு, திருவிற்கோலம், திரு இலம்பையங்கோட்டூர், திருவூறல், திருவாலங்காடு, திருவெண்பாக்கம், திருபாசூர், திருமல்லைவாயல். தி் வொற்றியூர், முதலிய மாலையாக வாய்ந்து விளங்கிக்கொண்டிருக்கின்றன.

## க்ஷேத்திரமாலைச் சருக்கம்.

சிவமுனீந்திரர்களே! இது காறும் கூறிவந்த மிக மகிமை வாய்ந்த திருவலிதாயத்தலம் ஒரு அரிய அமைப்பினை வாய்ந்திருக்கின்றது. அதாவது இத்திவ்விய தலத்திற்குத் திருமயிலையும், திருவான்மியூரும், திருவேற்காடும், திருவிற்கோலமும், திருவிலம்பையங் கோட்டூரும், திருவூறலும், திருவாலங்காடும், திருவெண்பாக்கமும், திருப்பாசூரும், திருவடமுல்லை வாயிலும், திருவொற்றியூரும் ஆகிய பதினொரு க்ஷேத்திரங்களும் ஓர் அழகிய மாலையாகச் சமைந்திருக்கின்றன. இவை யாவும் பல வற்புதங்களுடன் கூடிய அனேக மகிமைகளுடன் விளங்குவது. பிரணவ சொரூபியாகிய விநாயகப் பெருமானுக்கு திருவிவாக மகோற்சவம் நடந்தேறிய திருவலிதாய தலத்தினைத் தரிசித்துக் கொண்டு முறையே திருமயிலை முதல் திருவொற்றியூர் வரையில யாத்திரை செய்து மறுபடியுந் திருவலிதயாத் தினையடைந்து மகாபிஷேக முதலிய இறைவேற்றி வணங்குவோர்கட்கு, அம்மம்ம! அவர்களடையும் பலன் இவ்வளவென ஆயிர நாவுடைய ஆதிசேடனாலு முடியா தெனனில நான் எனனவென்று உங்கட்குச் சொல்லப் போகினறேன். இத்தலத்திற்கு வந்த தேவர்களும், முனிவர்களும், அரசர்களும் இங்ஙனமே யாத்திரை செய்து அபாரமான திருவருளை நமது கருணைக் கடலாகிய கண்ணுதற் பெருமானிடத்து அடையப் பெற்றார்கள் எனச்சூதமா முனிவர் திருவாய் மலர்ந்தருளிய வார்த்தையினைக் கேட்ட நைமிசாரணிய வாசிகள் ஆனந்த மடைந்து முனிவரை வணங்கிப் பல தோத்திரம் புரிந்து அவர் பால் விடை பெற்றுத் தென்திசை நோக்கி நடந்து வலிதாயத்தினையடைந்து தரிசிக்கையில் தங்கட்குச் சூதமுனிவர் சொல்லியிருந்த மகிமை யனைத்துங் கண்டு களிப்

படைந்து பன்னிரு க்ஷேத்திர யாத்திரைசெய்து முடித்துத் தங்கட்கு வேண்டிய வரங்களை யடைந்து சில காலம் அத்தலத்திலேயே யிருந்து பின்னர் நைமிசாரண்ணிய மடைந்து சிவராஜ யோகத்தவஞ் செய்து செய்து கொண்டிருந்தனர்.

க்ஷேத்திர மாலைச் சருக்க முற்றிற்று.



## வாழி.

போற்றிடுநற் கொன்றைமுடி லத்தொளிரும் வலிதாயப் புனிதன் வாழ்க, சாற்றிய நற்கருணையுரு வாகியெழுந் தாயம்மை தாள் வாழ்க, வேற்ற திரு நீற்றுமணி யைம்பதமிவ் வுலகமெலா மிலங்கி வாழ்க, தேற்றிடுவை திகசித்தாந்தசைவ மாமேற் சிறந்து வாழ்க.

அறுபான் மூவர் நாயன்மார்களி லொருவராகிய
வாயிலார் நாயனார் பரம்பரையில் வந்த வரும்,
சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவப்பிர
வர்த்தகாசிரியரும், மதுரைத் தமிழ்ச்சங்
கத்துப் மகாவித்துவானும், சென்னை
மெய்கண்ட சந்தான சபையின்
கிராசனாதிபதியு மாகிய சித்தாந்த
சரபம்-அஷ்டாவதானம்

**பூவை. கலியாணசுந்தரமுதலியாரவர்கள்.**

இயற்றிய

திருவலிதாய புராணம்

முற்றிற்று.

சிவமயம்.

# வலிதாய நாதர்மீது

# எச்சரிக்கை.

இராகம்-ஸஹானா தாளம் ரூபகம்.

அருமாமறை தினமேத்திடும ஐயா அருள துய்யா
திருவாழ்தரும் வலிதா யததுறை தேவே எசசரிக்கை. க.

பண்ணார்மொழி தாயம்மையின பாகா அன்பர் மோகா
தண்ணார் பொழில் வலிதா யததுறை தலைவா எச்சரிக்கை உ.

புவிமீதினி லன்பர்க்கருள் புணியா மிக சுண்யா
பவநீககிடும வலிதாயததுறை பதியே எசசரிகசை. ங.

நீலஞ்செறி கண்டம் பெற நேயா அதி தூயா
கோலம்நிறை வலிதாயசததுறை கோவே எசசரிக்கை. ச.

தேவர்குரு காடத்தினைச நீததாய கணணிற் பார்த்தாய்
மூவாபணி வலிதா யததுறை முதலே எசசரிகசை. ரு.

அனுமாரப ராதத்தினை யழித்தாய் பவ மொழித்தாய்
முனிவோரசெறி வலிதா யததுறை மெய்யபா எசசரிக்கை சு

குறுமாமுனி மிகவேந்திடுங கோவே பெருந்தேவே
துறவோர்துதி வலிதா யததுறை துரையே எசசரிகசை. எ.

ஈண வர்குத்தயை செய்தாய் கிருபை பெய்தாய்
வேதன்டணி வலிதாயததுறை வித்தகா எசசரிகசை. அ

ஆனைமுக றுமுகன் அத்தா நனி சுததா
சோலைபொழி வலிதாயததுறை சுகமே எச்சரிக்கை. கூ.

விடைமீதவந் தடியார முனம் வெகுவாய் வரந்தருவாய்
தொடைசூழ்தரு வலிதா யததுறை தூயா எச்சரிகசை. க0.

எச்சரிக்கை முற்றிற்று.

---

## லாலி.

இராகம்-பைரவி தாளம்-ரூபகம்.

தாயம்மை மோகனுக்கும் போகனுக்கும் லாலி
தன்னிகரில் ஐயனுக்கும் தூய்யனுக்கும் லாலி லாலி. க.

பத்தர்மகிழ் நேயனுக்கும் தூயனுக்கும் லாலி
பண்ணவர்சி னேகனுக்கும் ஏகனுக்கும் லாலி லாலி. உ.

பங்கயநற் பாதனுக்கும் நீதனுக்கும் லாலி
பரந்தமுக் கண்ணனுக்கும் வண்ணனுக்கும் லாலி லாலி. ௩.

அருமறையின் மூலனுக்கும் மேலனுக்கும் லாலி
அன்பர்பவ நாசனுக்கும் நேசனுக்கும லாலி லாலி. ௪.

அத்திமுக னைப்பெற்ற அத்தனுக்கும் லாலி
ஐம்முகங்கொள் வித்தனுக்கும சுத்தனுக்கும் லாலி லாலி. ரு.

நெற்றியினற் கண்ணனுக்கும் வண்ணனுக்கும் லாலி
நீலமுண்ட கண்டனுக்கும் சண்டனுக்கும் லாலி லாலி. ௬.

தமிழ்மறையில் மோசனுக்கும் வாகனுக்கும் லாலி
தனியானை யுரித்தோர்க்கும சிரித்தோர்க்கும் லாலி லாலி எ.

அசுரர்குல காலனுக்கும் சீலனுக்கும லாலி
ஆறணிந்த குழகனுக்கும் அழகனுக்கும் லாலி லாலி. அ.

அரவணிந்த மெய்யனுக்கும் செய்யனுக்கும் லாலி
அருங்கயிலை வாசனுககும் ஈசனுக்கும் லாலி லாலி. ௯

வானவர்கள் நாதனுக்கும் போதனுக்கும் லாலி
வலிதாய ஊரனுக்கும் தீரனுக்கும் லாலி லாலி. ௧௦.

லாலி முற்றிற்று.

---

## மங்களம்.

இராகம்-அசாவேரி தாளம்-ஆதி.

வலிதாய நாதனுக்கு ஜெயமங்களம்—தமிழ்
மாமறைநல் மூலனுக்குச் சுபமங்களம்
புலியாடை தரித்தவற்கு ஜெயமங்களம்-நாளும்
புண்ணிய சொரூபருக்குச் சுபமங்களம். க.
தாய்மை நாதனுக்கு ஜெயமங்களம்—நம்பால்
தண்ணருள்தந் தாள்பவற்குச் சுபமங்களம்
பாயுமவிடை யூர்பவற்கு ஜெயமங்களம்-பல
பாம்பணி நற்றோளனுக்குச் சுபமங்களம். உ.
தந்திமுகன் தந்தையற்கு ஜெயமங்களம்-மதி
தவழ்கங்கை தரித்தவற்குச் சுபமங்களம்
அத்திவண்ண மேனியற்கு ஜெயமங்களம்-தாவும்
அழகுமா னேந்தினற்குச் சுபமங்களம். ங.
சண்முகனைத் தந்தவற்கு ஜெயமங்களம்-உயர்
சடைமுடியைக் கொண்டவற்குச் சுபமங்களம்
கண்விழியைத் தெரித்தவற்கு ஜெயமங்களம்-யார்க்கும்
கருணைதந் தாள்பவற்குச் சுபமங்களம். ச.
கேசவனைக் காத்தவற்கு ஜெயமங்களம்-அனுமான்
கேடொழித்தாண்டவற்குச் சுபமங்களம்
வாசமலி கொன்றையற்கு ஜெயமங்களம்-சுடர்
மழுவேந்துங்கையினற்கு சுபமங்களம். ரு.
இன்புமுறு மீசனுக்கு ஜெயமங்களம்-மிக
ஏழைவிசு வாசனுக்குச் சுபமங்களம்
அன்பர்பணி நேசனுக்கு ஜெயமங்களம்-எங்கள்
அழகுவலி தாயனுக்குச் சுபமங்களம். சு.

மங்களம் முற்றிற்று.

சிவமயம்.

# ஓம் பிரணவ சொரூபாய நம:

## பாடியென வழங்கும் திருவலிதாய க்ஷேத்திரமான்மியம் :

இது

ஸ்ரீநந்திநாடியிற்கண்டது.

பரவை நீர் மேல்பாகத்தும் பால்நதி வடபாகத்தும்
இறைவனும் கபாலிநாத னிருக்குகள் முதலாப் பூசை
சரசமாப் புரிந்த போத சாரபினும முறைமை தஙகும்
குரவனும் வள்ளுவன்வாழ் குறிஞ்சிலை தனக்கும் பக்கல் 1

இருதயத் தடைத்துவேத விறைவனைப் பூசித் தேற்றித்
திருனெறி தருமூனுக்குத் தேர்நததோர் வன்னிதிக்கில்
குறுமுனி யசுரர் தம்மைக் குடிபுகவீ டளித்த
மருவிய விலக்கு மேல்பால் வலிதாயமென்னும் பேரே 2

வேறு.

பிரமனின் றவத்திடை பிறந்த தோகைமார்
சிறந்திடு கட வுளைச் சேர்த லுன்னியே
யறம்பல பயின்றிடு மன்னை தன்னொடு
சிறந்த பூசனைசெயுஞ் செய்கை பூண்டனர் 3

மூவரின் முதல்வனு முதுமறைக்கெலாம்
தேவரின் தேவனுந் தெளிந்த வின்புமே
யாவர்க்கு மருள்தரு மாதிநாயகன்
பாவனை புரிந்துமே பணணினுர் தவம் 4

தவமது முயலுநாள் தக்க தேவர்கோ
னவமதா யழித்திட வுமரர் சென்றுழி
சிவமென வினைந்திடாச் செய்கை சான்றமை
கவனமுற் றிருந்தனன் கடவுளங்கனே. 5

விடைமிசை பாவையும் வேத வேதனும்
மடமயில் தவம்புரி வனத்தில் தோன்றினன்.
கடவுளின் வரவெதிர் கண்டஙகேத்தியே
படவரவல்குலார் பணிந்து போற்றினா. 6

யாதுகா ரணமவை விரும்பிநீர் தவம்
போதுறப் புரிந்தமை புகலுமெனறனா
மாதரவ் விருவரும் மகிழ்ந்து வேட்டவை
போதுநாயக னெனக்குரிமை வேட்டென 7

கலகல வெனநகை புரிந் தஙகையனும
நலமுறு மடந்தைகேள் நாயகன்னென
குலவுதலழகல கொண்டசிந்தனை
நிலவுறு பிரணவ நிலைக்குமோ சொலாய் 8

என்றுகொண் டிவ்வித மியற்றச் சஙகரன்
நன்றுறு மகிழ்னநீ யாகவேண்டியே
நின்றுயாம் நெடுந்தவ நிலைபுரிந்தனம்
கன்றுறு பசியினை யாவறியாததோ 9

பிரணவ சொரூபமாம் பேத மின்றியே
யரனுரு வைங்கர மூர்த்தமா கியாம்
குறைதவிர்த் தருளுவோம் கோதாய் மற்றவை
யுமையரு ளுதுமென வுரைத்து நின்றனன் 10

மாசிலா வடிவமே வந்து கூடினும்
நேசமான றேயலால நேர்ந்தமாய்கையாம்
பாசமே யொழிந்திடப் பரிந்துநீ ரருள்
ஈசனே யென்றன ரிருவ ரானவர் 11

இப்பெரு வரத்தினை யீந்து வள்ளலும்
மொப்பரு மடைந்த கேளுட் குறையாவுமே
செப்பிடு மருளுது மெனச்செவி மடுத்திட
ப்பனே யிரங்க ராதியாகுகி

பாடலத் தருவடி தன்னிலே தவ
மாடலோ டிருந்து மெய்த்தவ மியற்றினர்
மாடுயர் கடவுளும் மகிழ்வுட னங்ஙனே
யாடல்கொண் டிருந்தன ரரிவை மார்க்கதாய் 13

(பாடலம் என்பது பாதிரி விருக்ஷம்.)

காமியத்தவமதைக் கன்னிமார்களும்
சேமுற்றிழைத்த தானிலமுண்டவ
ணுமிதிற்சுயம்புவாயை யணுகியே
காமியவனமெனக் கருதிக்கூறினன். 14

முல்லைமாமலர்சேரடு மொய்குழற்றவ
மெல்லையிலருச்சனை யிட்டகாரணம்
தொல்லைகளகற்றிடத் தோன்றல்தோன்றினர்
முல்லைமாவனமென முனிவர்கூறுவார். 15

கன்னிமாருழ்வலி களைந்தவெல்லையில்
கன்னியவிடமதை நாயகன்மிடர்
தன்னிடையமைத்ததும் தானவப்பகை
யன்னிலைகளைந்ததுமாகுமென்பரால். 16

மான்மகனீன்றிடும் மடந்தையர்க்குமே
தேன்பெருஞானவாருதியை யீந்தனன்
வான்பொழிமலரயன் வந்துபோற்றியே
யாண்மையுமுதிர்ந்தனரரசும் பெற்றனர். 17

கற்பெலாந்திரண்டொரு வுருவமாகிய
பொற்கொடிமணம் புணர்ந்திட்ட மேன்மையால்
கற்பகாநாட்டிறை கனமழைபொழிந்துமே
யற்புதம்புரிந்தனன் மமரர்கோவுமே. 18

செப்பியமுனிவரின் செயலறிந்துமே
லொப்பியவற்புத வும்மகிழ்ந்திதை
யப்பனேகூறிய விவைமாகன்பி
ளெப்படிபிரணவத்தை யிழையலாயினர். 19

கயமுக னென்னுமோர் கரியதானவன்
நயமதா யிறைவனை நன்மலராக் கொடு
வயனுறப் பூசனை புரிந்தக குலகெலாம
செயிலுறு வலுவினைச் சேரப் பெற்றனன். 20

பெற்றுக் கொண்டிந்திரன் முதற்பெரு தேவர்கட்
குற்றதீங் கிழைத்திவ னுறையுந் திசைகளிற்
பற்றிய பாலரை பகைததுமே ஜெய
முற்றுவாழ்ந் திருந்தன னுலகில் மிக்குளோன் 21

அரிதரு மயனிடை யழுது வெம்பியே
சுரர்க்குள பகையெலாம சொலலலாயினா
முறையுறு பதுமனும் முதியமாவிட
முரைப்பதற் கிசைந்துமே யுற்றத கேகினா 22

மாலடி வணங்கியே மாற்றலரின் பகை
யேல்வு மெடுததிவை யிசையக் கூறினர்
மாலொடு பிரமனும் மற்றுளாாகளு
மாலமுண்டவ னிடமறியக் கூறினர் 23

கயமுகன் செய்கொடுக கடமை கேட்டுமே
யயனரி யிந்திரன் தனைனை நோக்கினர்
ஜெயமுறு பிரணவ முருவமே யருள்
கயமுக னெனும்பகை களையு மெனறனா 24

அந்தநாள் வரைகொடும் பகை களைந்திட
ரிந்துவேணிய னும் நீ யிருப்ப தெனனினும்
சிந்துர மதகரி செய் யிடுக்கமு
மெந்தநா ளொந்தையே யென்று சேட்டனர் 25

கேட்டவத் தேவருக் கிறைய ருளியே
நாட்டமிற் பிரணவ ரூப யானையாய்
வேட்டமாப் படைகளும் மேன்மை பூணஇ
யாட்டமின் சடையுளோ னவதரித்தனன் 26

ஐங்கரம்பாலமுமழுதண்டமும்
சங்கர பாசமும் சடையுமேன்முடி
தங்கியதிகிரியும் தனுவுஞ்சங்கமு
மங்கணனருளினி லேங்கரன்தோன்றினர். 27

வேறு.

சத்திசத்தர்கள் தமுருவெலாந்திரண்டு
சார்ந்ததோர் வேழமாமுகமும்
வெற்றியைங்கரமும் மென்புரிநூலும்
விளங்கிய கிண்கிணி யரையும்
பற்றியகரங்கள் தோறுமாயுதமும்
பசுபாசம் விலக்கிடுநோக்கு
முற்றுநற்றவத்தோ ருளத்தினின்றாடு
மொருபெரும்பொருளதிர்கின்றான். 28

பிரணவ சொரூபவதனமும் பெரியோர்
பேசவும் கூசுநன்மொழியும்
பரனருள்மதலை பாரினைப்பிளக்கும்
பக்குவதந்தமுமுலகை
யரைக்கணமதனில வலம் வருநடையு
மருமறைதமக்கெலா மெட்டாப்
பிரணவவடிவ வொருவனை நோக்கிப்
பிஞ்ஞகனறைகுவ னிதனை. 29

உலகிடைநீசென்று ருவெலாந்திரண்டே
யோங்கிய கயமுகனென்னும்
கிலையிலா வவுணன் குடிகெடுத்தருளி
கொடியமானூழ்வினைபோக்கி
நலமுறக்கருதி நம்மையேவிரும்பி
நாயகிமாரிருவோர்கள்
வலமுறவதவைப்புதுக்கி யன்னவர்தம்
மனக்களிப்பேற்றியேவருக.  30

இறைவர்க்குத்துணையாயிரண்டாயிரம் வெள்ள
மியற்றியபூதமாகணமும்
பிறையணிசடையான் தந்துமேலிருக்கிற்
புகட்டியமந்திரமுரைத்துக்
கரிமுகன்றன்னை வாழ்த்திமெய்குளிரக்
கட்டியே தழுவியும்விடுத்தா
னறையில் கிண்கிணிகளாற்பவுமாற்ப
வமர்க்கோலங்கொண்டனனையன். 31

துரகதம்பரிமா முன்னதாய் நடக்கத்
தோன்றலின் பின்னணிபதனில்
முறையுறு தேவ ரார்ப்பரிதெழுந்தே
முனிவர்கள் மறைதிரம்படிக்க
வருமறைவாசி பூட்டியரதத்தி
லார்ப்பரிந்தெழுந்து நின்றருளிப்
பெருவலியுடைய வவுணனூர்புகுந்தான்
பெருவலிகொண்டவனெழுந்தான். 32

ஆர்வலிகொண்டு தனுவினைவளைத்தங்
கடல்வலிகொண்டவந்நாளில்
பேர்வலிகொண்ட வவுணனினுயிரைப்
பெருவலிகொண்டிவன் கவாந்தான்
சீர்வலியுடைய வவுணன் மூஷிகமாய்ச்
சிவபிரான்மதலைமேல் சீறி
நேர்வருநாளில் குஞ்சிதத்தாளால்
நெறித்தனன வுணனுஞ்சோர்ந்தான். 33

எவ்வரம்வேண்டு மவுணனே யுனக்கென்
றெனவரன்மதலையுஞ்சாற்ற
வவ்வரமுமது பாதமெந்நாளு
மடியன்மேல்வகுத்து நின்றருளிப்

பவ்வமாம்வினைகள் யாவையுந்தொலைத்தங்
குன்பார்வையென்மீதுறக்கருணை
யொவ்வவேபுரிய வேண்டினனென்று
3

கருங்கடலென்னத்திரண்ட வான்படையைக்
கணங்களுக்கிறையவனோக்கி
யருங்கனாக்கனியினி றதவினையுடைய
வாதிமால் சாபமும் நீக்கும்
பெருங்கடற்கருணை பூததவான் படையைப்
பேசரும் பாடியில் விடுத்துத்
தரும்வரைசிகரம் நிகர்குயமுடைய
தையலார்தாபந தீாத்தருள்வோம. 35

இவ்விதமியம்புமந்தணன் றிருத்தா
ளிறைஞ்சியேசங்கனெனபவனு
மொவ்வியகருணைவள்ளலே யுன்ற
னுளத்திடை குடிகொளுமாட
லெவ்விதமுளதோ யாங்களுமறிய
வியற்றினீரெததவ மிழைத்தோம்
கொவ்வைசேர்மொழியாா புணணியமயாதோ
கூட்டவுமாடவுமெனறா. 36

படைக்களத்தவிந்த வுணமவலாமுண்ட
பாரிடத்தலைவரைநோக்கி
யிடையதேவிடுதி யமைததுளீர்வின்மி
னிவ்விடந்தன்னிலே நெடுமால
தடையரவான புன்மை நீத்தருளித்
தையலர்மோகமுந்தவிாப்போம்
விடைமிசைவருமெய்ஞானருளினனென்றான்
வேதமுமறிவுருமூர்த்தி. 37

இறைவனுரளித்த பூதமாம்படைக
ளிருப்பதற்கிடமமைத்ததனுல்
பிறைமுடிச்சடையோ னருளினுலுணவங்
குண்டிருந்தருளியப்படைகள்
கருணையேவடிவா யெழுந்தருள்மூர்த்தி
கணமலரடியினைதொழுதங
கொருவருமுணரா மூவராலறியா
வுத்தமன்மால்பழி நீத்தான. 38

மாலினுங் குற்றபாம்புருகளைந்து
மான்மகன் மகள்தனைமணந்து
மேல்வருமின்னுர் விரும்பியவரங்கள்
விரும்பிய வாறவையளித்துச்
சேல்விழிபோன்ற மாதரோடிசைந்து
சிறந்தோரவர்கள் பூசித்த
மேலுறைமுல்லை வனமதையடைந்து
விரும்பினுன் தவநிலையம்மா. 39

இக்காளில் மாலிந்த முருவழித்து
மால்பூசைக்கிருந்து காத்துப்
பின்னுளிலரிதனக்குப் பெரியவை
குண்டமெனும் பதமளித்தே
யன்னேனுங்கேட்டபடி யாழிமுதற்
படைக்கலமுமேயளித்துப்
பின்னேன்பெண்ணுன நறபாவையரை
மணந்தாளட்டமியாப் பேசுநூலே. 40

தன்னுரிய பரிசனத்துக்குற்றபணியேயமைத்துத்
தவமேற்கொள்ளும
மூன்னுரிய முனிவர்க்கு மரியவரமீந்தருளி
யடல்மேற்கொண்ட

பண்பினியபாரிடரின் பசிதவிர்த்துப்
படிவீடுபெடியச்செய்த
முன்னிலையால் பாடியென மொழிவதிந்த
நகரமதை முனிவர் என்றான். 41

பாவையர்களிருவரையும் பகர்ஞானவுருவாக்கி
பாவாவெம்மைத்
தாவிதவமிழைத்தமையால் தையலரே யிந்நகர்
முத்திர
மாவதெனவநகருளி யனுதினமுமிங்குறைவோ
மரனைப்பூசை
தாவுதவமிழைத்திடவே வேண்டுமெனத்தனிக்கடவு
ளெழுந்தானங்கு. 42

கொண்டவாயுதங்கள் பாடிவீடமைத்துக்
குளிர்புன்லாடியே யின்றங்
கண்டர்கள்போற்று மஷ்டமியதனு
லரன் பூசைவிருமபியேபுரியத்
தண்டமிழ தனைக்குறுமுனிக்களித்த
தரும்வலிதாயநா தன்றன்
கண்டு பூசித்தானைங்கரத்தோடும்
சளமலரீந்தனர் மாதா. 43

அசுரர்தம்வலியை யடக்கியாண்டருவ
யாரிழைமாாக்கின்பமேதந்து
பசுவிறத்துகளால் பூசனை புரிந்து
பராபரன்கருணையேயடைந்து
சிசுவெனச்சுரர்கள் குலங்களைக்காத்துச்
செய்யசூர் கயமுகன்றனக்கே
யுசிதமாந்தனது மெல்லடி யவன்மேல்
விளங்கிடத்துலக்கினனுலகை. 44

பதுமனின்புதல்வி யிருவர்க்காச்செய்யப்
பாடலத்திருவடி நிழலில்
முதுமறையறியா வந்தணனிருக்க
முன்னவன் கருணையைநோக்கிப்
புதுமலரனந்தம் பூவையர்பரித்தங்
களிக்கவுங் களித்தருசசித்துத்
துதிபெருநதியுஞ் சோலையுஞ்சாலச
சூழ்ந்தனமுல்லைமாவனமே. 45

வேறு.

அறிவே சிவமா யருளே பொருளாய்வருநாதன்
குறுமாமுனிவர் தொழுவோர்வினைதீர்வலிதாயன்
திருமால்முதலோர் தினமும்வழிபாடுளபோதன
கரிமாமுனிவரே பொருளென்றுணர்வாயே. 46
அடியார்வினையைப பொடிசெய்தருள்வீடருளுநதன்
குடியாயடியார மனவீடடையும் குணக்குன்றம்
பிடிநேரிடையுங் குயில்போல்மொழியுங குலமீதா
துடிநேர்விழியாய் மயல் தீர்த்தருளும துரையம்மா. 47
மனமாயிருளை யடிவோகளையும் மொருகொம்ப
னினமானவரை யினைமேசோக்கு மிருதாளன
கனமார்மலரோனடிமேல்வருடுங கனபாதன்
முனமாதொழவே வினைதீர்த்தருளும் முதலன்றே. 48
இருக்காலறியாப் பொருளையிறைவன் கரங்கொண்டு
திருக்காலமுமே யிருக்கால்பூசை தெளிவிததான்
தருக்கால் மரதா தழையுற்றோங்கித் தனியானை
செருக்கால் பூசை புரிவாரிவரே வலிதாயன். 49

வேறு.

உடுபதிபூசைக்கிரங்கி வலிமையுளதெய்திப்
படுவிடயாற்றிப் பகலுக்குற்றபதமெய்திக்
கடுவுட்டமுண்டு கண்டங்கறுத்தகடவுளைத்
தொடுமலர்பூசை புரிபவர்மேல்வீடடை வாரே 50

வாசுகிகொண்டபகையை விலக்கும்வலிதாயன்
'தேசுயர் வன்னி பூசனைபுரியுத் திகழ்கோமா
ஞசறநின்று வாமனனுக்கு வரம்நல்கு
மீசனுமிவனே பிரணவமிது வென்றறிவாயே. 51

கற்பகமலரோன் பூசனைபுரிந்தகணநாத
னற்புதமாதர்தம்முட னின்றங்கலாகும
சிற்பரன்பாதம் பூசனைபுரிந்தான தினமென்றால்
பொற்புளவுலகோர் புகழ்வதுவெளிதோபுகல்வாயே. 52

மல்லிகைமுல்லை செண்பகயலரு மரமவிந்த
சொல்லறுகூவிளங் குவளநற்புன்னை பரிசாதம்
நல்லநறுந்தேனினித்தெழுந்தருள மலாகொண்டு
வல்லவனுன வைகரன பூசைசெய்வலிதாயன். 53

மாமலர்கொன்றை பாடலம் நெய்தல் மகிழம்பூ
கோமுறைவட்டமருகொடு தும்பை குடமல்லி
சாமயம்விருட்சி பன்னீரமருகைகடுமலவி
பூமியிலுள்ளமலரெலாங்கொடு பூசிதசானே. 54

கனிரசம் நறுநெய் பால்தேனகொண்டுபடைப்பித்தங்
கறுசுவை போனக மட்டிலமைத்தே யனலாகும்
குருபரன்பூசை குறையறச செய்தான்குணம த
ரிருபுறநின்றுயேந்தினமுறமை யென்சொல்வேன். 55

சோதிபெறுவொளி மாதரிருவரும் வலமாக
நாதனருள்கொடுபாதமலர் தனிற் பணிவெய்திப
போதமலர்கொடுநாதனடியிணை போற்றுங்கால்
வேதமறிவுரா நாதமலர்நிழல்பெற்றுய்ந்தார். 56

வேறு.

கற்பமெலாங்கடந்தருளிக்
காரணபஞ் சாக்கரமாங்கடவுள்பூவி
லுற்பதமா நாமென்றே
யுரைப்போரே பார்க்கவருமுருவொன்றில்லா

வற்புதனையடியவர்க
ளகக்கமலங்குடிகொள்ளுமனுதிமுத்த
சிற்பரனையிப்புவியோ
ரப்படியென்றிப்படியென்றுரையொணதே. 57

நவமூகூர்த்தங் தனக்குதலை
நான்மறைக்குந்தலையாகி நாதாந்தத்தின்
சிவமுகூர்த்தந்தனகுதலை
சின்மயதநின் முதலாகிச் சிறந்தோருள்ளம்
பவமகற்றும்பொருளாகிப்
பராபரமுங்கடந்ததுவாய்ப் பொருளொன்றுண்டென்
றவமகற்றும் பொருளெதுவோ
வதுவிந்தப்பொருளென்று வரைந்திட்டேனே. 58

அரிபிரமாதியதேவர்
தமக்கயிக்கியமா மணுவினுள்ளும்
பிரிவதிலை யெனவிருக்கும
பொருளெதுவோ வெனவுரைக்கிற் பிரணவந்தான்
கரிமுகமுங்கரமைந்தும்
நால்வாயுமுபபுரியுங் கமலபாத
திருவீன்றுபூசிக்குந்
திருமாலபூசித்ததிருவடியீதம்மா. 59

வே று.

இப்பெருங்கருத்தினு லிறைவன் வாழ்பதி
யற்புதம்பெருகிய வீரியபாடியாம
பொற்புறுவடந்தையா புணாசசியின்பமாங்
கற்பனைமாற்றியே கருதுஞ னமா
மற்புதமமிர்தமே யறிவைககூட்டின னன்
சிற்பரனருளினைச செப்பற்பாலதோ. 60

தேவிமாரிருவரை நோக்கிமுன்னவன்
வாவிசூழிந்தலை தன்னிலேசவம்
மேவிநீர்செய்த் மேற்குறியதிங்கியாதென
வாவியாங்கட்வுளை யரிவையர்காட்டினா. 61

கைகமுகம்புரிந்துமே னகைகமார்மனம்
பகைகளைந்திடவரும் பருதிபோலவும்
முகைபுனைவேதமுப் பொருளுமாயிருட்
பகைகளைந்தவனிவை யறிநதுகூறுவான் 62

பொருளினையறிந்துநீ புரிந்தசெய்கையால்
கருதியபடிதவக் காட்சிகண்டனை
அறிவினிற் சிறந்தவ ராகினின்றெமைப்
பிறிவுறாவரமுநீர் பெற்றதென்றனர். 63
பாடலவிருட்சமும் பாடிநாமமும்
ஆடகச்சபையிடை அமருந்தேவியும்
வீடகமிதுவென விளங்கநாடொறும்
தாடகத்தொழுபவர் தனிவீடெய்துவார். 64

வேறு.

சிந்தையில் நினைத்ததெல்லாஞ்
சிவபிரானருளால பெற்றே
எந்தையையிவ்வாறு பூசை
யியற்றினோ பெருமவீடெய்தி
அந்தணன்பாதநதன்னை
யடைகுவரென்றும் வாழ்த்திப்
பைந்தொடி மாதரோடு
பராபரன் கைலைசார்ந்தான். 65

வேறு.

பரிசனக்குமரனும் பருதிமைந்தனும்
கரிநடாவியநெடுங் ககனவேந்தனும்
பருதியின்குலப்பகை பரித்தராமனும்
திருவுடன்பூசைசெய் தெய்வமாநகா. 66
மான்மகனுடுபதி வன்னிசெஙகதிர்
வான்பொழிசதமகன் மறலிவாயுவும்
தேன்பொழிபங்கையன் தேவர்க்காரியன்
ஊன்பகைகளைந்து செயூழிநீங்கினர். 67
பரவையின்கருவரு பாரத்துவாசனும்
முறையுறுதவத்தினல் முன்னவன்றனைப்
பிறையுறுமௌலியைப் பேதகமகன்றிட
மறையுறுவிதிப்படி வைகினன்றவம். 68

இன்னவர்யாவரும் யாதுகாரணம்
அன்னிலைதனிறவ் வுறிந்திலழைத்தனர்
என்னவவ்வுமையவட் கிசைந்தவாய்மையால்
முன்னவன்தொண்டுசெய் முனிவன்கூறுவான். 69

வாசுகிதன்பெரும் வலுவடக்கிடத்
தேசுயர்வாயுவும் தேவதேவனைப்
பூசனைபுரிந்துல கேத்தமேன்வலு
நேசமுற்றடைந்தனன் நிலைமையென்னவே. 70

அடைந்திடுபரிசன னமரர்நல்லுல
கடைந்திடவம்புவி சிறிநடுங்கிட
மடங்கவேவசிகர்வரை முடிகவாந்தனன்
நடம்பயில்சங்கர னல்வடிகொடே. 71

பிஞ்ஞகன்றிருத்தவ மழித்தல்வேண்டியே
வஞ்சமுற்றிந்திரன் மதனைப்போககினை
அஞ்சுறுகணையினல் அரனின்மேனியில்
பஞ்சபாணம்படப் பகைத்தெரிந்தனன். 72

அரன்விழிகனலினு லரியின்மைந்தனும்
எரியுறவானவ ரிசைந்தமாயனும
திரிபுரதகனன்பால் தேவர்வேண்டவே
குறிய்றமாரனைக் குழகன்றந்தனன். 73

ஈசனுக்கிழைத்த் வூழவைசழிந்திட
வாசவன்முதலினோர்ம மாரன்றன்னொடு
தேசுயரிங்கர் தேர்ந்த பூசைசெய்
தாசினையொழிந்தனர் தவத்தின்மேன்மையோர். 74

கனவியுமறலியின் சீற்பினுனையே
புனலருகிடைகவர்ந் தொளித்துப்போயினன்
அனலிலாதுவகெலா மழிந்ததுழினல்
கனவியுமேற்றனன் கடிதிற்பாவமே. 75

அக்கொடும்வினையினை அகற்றவேண்டியே
மைக்குழல்பாகனூர் வாழுமிந்நகர்
புக்கொடுபூசனை புரிந்தவ்வூழியைச்
சிக்கறத்தலைத்தனன் செய்யவங்கியே. 76

ஈசனின்னன்பரை யேமனென்பவன்
நேசமொன்றின்றியே நெருங்கிப்பாசம்விட்
டீசனையன்பரை யீர்த்தபாதகம்
ஆசறவருச்சனை புரிந்தறுத்தன. 77

உடுபதிதினபதி யுரகர்புனமையால்
தொடுமெனவஞ்சி யத்துயரம்நீங்கிடக்
கொடுவிடமுண்டவன் குஞ்சிதத்திரு
அடிமலர்பூசைசெய் தாசுநீங்கினார். 78

அஞ்சனமேனியா னசுரர்தங்கு
வஞ்சியின்தர்ப்பறு மகிழ்நர்போன்றுமே
வஞ்சனைமீதுறப் பருகுநாளையில்
பஞ்சியுறணர்ந்தனள் மாலவனென்னவே. 79

அழகுறுமகிழ்நா பேரலாடல்பூண்டனை
கொழுனனீயென வுனைக்கொண்டபாதகம்
அழியுடல்விடுவதே யழகதாமென
செழுகனல்மூழ்கினாள் செய்யவலலியே. 80

ஆருயிர்கரைந்திடு மந்தநாளையில்
பாரிகர்மடந்தையும் பாவைமார்களால்
பேருறுமோகமாம் பித்துழன்றுநீ
சோர்வுறச்சாபமே சொல்லிப்போயினள். 81

மடந்தையர்சாபமும் மாற்றல்வேண்டிய
விடர்தனையுண்டவன் மெல்லடிக்குநாள்
அடர்ந்தருமலர்கொடங் கருச்சனைபுரிந்
திடர்தவிர்த்தொழித்தன னின்பமிக்குளான். 82

தக்கனும்மகம்புரிந் திட்டநாளையில்
மைச்குழல்பாகன்மேல் வசைகள்கூறியே
இக்கெலாம்போற்றிடத் தேவரேத்திட
மிக்குறையாகத்தீ மூட்டினரோ. 83

அம்பெருமகத்திடை யயனுஞ்செங்கண்மால
புக்கியுமுணர்ந்திதை புனிதனைகுரு
தக்கனுக்கவையினை தானுணர்த்திடா
மிக்கவுமியரிருந் தியற்றினர்மகம. 84

அறிபவர்றிந்திலார் தமக்கறிந்தமெய்
தெறிவுறக்கூறுதல் தேவநீதியால்
உரிமவனகுரு துணர்விலாச்
உரியவனிகழ்நதமை செவிகொடுத்தனர். 85

சதமகன்பதுடனே சாருந்தேவர்பால்
இதருமுயிருநதிவ ரியற்றுமிமமகம்
அதமதாயொழிந்திட வையன்நோக்கினன்
சிதைவுகொண்டொழிநதனர் செய்தமாக்களே. 86

ஞானமாமலரிடை நடிக்குமீசனை
மோனமுற்றவரறிந் துணருமெந்தையை
வானகவமிதமாய் வளருமபேற்றினை
ஏனையோர்புன்மொழி யேற்றலபாவமே. 87

இப்பெரும்பாதக மீடறுத்திட
ஒப்பிலாமூவரு முய்தலவேணடியே
செப்பிளமுலையினள் சேர்ந்தநலவலி
யப்பனைபூசைசெய் தவலநீங்கினா. 88

வானவாமிர்தமவேண்டி வாருதிகடைந்தபோது
நாணதுபொருதுநொந்து சடுகிடவிடத்தைவிட்டான்
வானவர்மனநடுங்கி மாதேவன்றனளைப்போற்ற
ஊனமில்லாமலுள்ளேடோ னுறைவலிதாயமாமே, 89

அந்தநாள்தொடர்ந்து ஐயன்வாழ்பதிக்கே
அரியபஞ்சாக்கரப் பதியென்றும்
விந்தையாம் நீதிதருமமுமுறையுட்
விளைந்துமந்தகன் பூசைசெய்ததனால்
கொந்தலர்குழலாய் தருமபுரமென்றும்
குறித்தோர் வாயுபூசையினால்
எந்தையர்தமக்கு வலிதாயரென்றும்
இயல்பின்மால் பூசித்தநெறியால். 90

அந்தகாரணத்தால் அஷ்டாக்ஷரப்பதியாய்
அரியதாமரை மலர்கொண்டு
எந்தையைததிருமால் பின்னும்பூசித்த
[illegible]
செந்துவர்வாயாம் பஙகயபுரமென்றும்
சிறந்த இந்திரன்பூசித்தனால்
அந்தமாநகர்க்கு இந்திரபுரமென்றும்
அரைகுவர் கற்றுணர்ந்தோரே. 91

எழுபரித்தேரோன் பூசனை புரிந்தே
இராக்கதர் குலப்பகை களைந்த
அழகுறுமுறையால் இன்னகர் தனக்கே
சூரித்தன் நகரெனப் பெயராம்
புகழுறுமதியம் பூசனைபுரிந்து
புன்மையை யகற்றியதனால்
பகருவர்சானறோர் சசிக்கிறைபெயர்கள்
பாவையேபொருந்து மிந்நகர்க்கே. 92

தழலவன்களித்துப் பூசனைபுரிந்து
தையலர் பாதகமெல்லாம்
அழலினில்விடுத்தமரர்நாடடைந்தே
அரிதுயர் நீங்கியதனால்

மழுக்கரமுடையு வுள்ளற்குநாமம்
வளர்ந்தெழுவன்னி யென்றொருபேர்
இழிவடைந்திருந்த மாரன்பூசித்த
இயல்பினுல் சங்கரன் றனக்கு. 93

யரிவையும்வெல்லும் மீளியென்றொருபேர்
யாவற்குமரியா னென்றொருபேர்
காவனமதனில் வன்றகாரணததால்
காகுத்தன் பூசனைபுரிந்து
ஆவுணவசுராகுலந் தகாதவொழித்த
அரியபாதகமெலாம ஒழிந்து
தேவதேவசின் சகாயமும்பெற்றுத்
தேர்ந்தன ரிவரெலாமமமா. 94

இரவியின்மைந்தன் பரிசனமைந்தன்
இருவரால் பூசனைபுரிந்த
ஆரணன்றனககே யருள்தருவலியோன்
ஐந்தக்கரத்திறைவ னென்றொருபேர்
காரணமுடைய கன்னிகையான
கமலவல்லியர் பூசைசெய்த
பூரணன்றனக்குப் புலத்தின் பேரெல்லாம்
பொரிந்திடுமென்றனர் மறையோர். 95

பாவையின்மைந்தன் பூசனைபுரிந்து
பண்புறுதீமக்குக் கண்ணொளியை
இறைவனுற்பெற் றங்கென்றும்மெயங்கு
இருந்தனன்தவக் கோலமுடனே
அரன்றிருவடியை யண்டரினுசான்
அடைந்துபூசனை புரிந்தமையால்
ஒருவடிதமக்குக் குருவடியென்றே
கூறுவர்மறையுணர்ந்தவரே. 96

முனிவரிலனந்தர் தேவரிலனந்தர்
முழுமறையாதியதாக
பனிவரைக்கடவுள் தமக்குமேபலபேர்
பார்வதிபாகனுக் குண்டாம
இனிமைசே ரிரவிகுலத்திடைவந்த
இயலுறுகுசலவரென்றும்
புனிதபூசனையைப் புரிந்தகாரணத்தால்
புகழ்ந்தது குசலிங்கமென்றே. 97
இப்பெருசிவத்தின் குறியதுசிறுக
இருந்திடும் யாதினுலென்னில்
அப்பனும்சுயம்பா முருவமாயாதி
அரிவையர் தமக்கதாய்வந்த
பொற்புறுமிலிங்க வடிவமாமிதனிற்
பொருந்துறு பர்வதாகார
அப்பனேன்றிவற்கே யாரணமெல்லாம்
அறைகுவு ரன்னையே யென்றார். 9.

வேறு.

காசினியதனிற்காசிகானத்தி கருவூர்காஞ்சி
பூசிதப்டேரூராரூர் புண்ணியப்புகலூர்தில்லை
வாசிதிரவன்னிகுன்றம் மணிகுனறம ஜம்புநாதம்
தேசிகனுறையுங்கோயி லிரைகெலா மதிகமாமே. 99
சிறந்தவின்நகரைக்கண்டு சேவிபபோர் செல்வமெய்திப்
பிறந்தருவிறுதிநீங்கி பேரின்டப்புனலில்மூழ்கி
அறம்பயிலன்னைபாக னைபருக்கனபேபூண்டு
வீரந்தரவீடடைந்து விமலனுரடிக்கிழ் வாழ்வார் 100
இப்பெரும்நகரில்வநதோர் வசித்தவர்பிறந்திறந்தோர்
ஒப்பிலாப்புனலிலமூழ்கி யொழுககமாயவலமாய்வந்தோர
மெய்ப்புளமடந்தடாகம் மேனமலர்வளங்கள்வைத்தே
அப்பனைப்பூசிப்போாக ளரியவீடடைவர்மாதோ. 101

திருச்சிற்றம்பலம்.